كتاب الأذكار ـ تاميلي

# திக்ருகளின் தொகுப்பு


جمعية الدعوة والإرشاد وتوعية الجاليات بالزلفي

29

هاتف: ٤٢٣٤٤٦٦ ٠١٦ ـ فاكس: ٤٢٣٤٤٧٧ ٠١٦

جمعية الدعوة بالزلفي

# كتاب الأذكار

**أعده وترجمه إلــى اللغة التاميلية:**

**جمعية الدعوة والإرشاد وتوعية الجاليات بالزلفي**

**الطبعة السادسة: ١٤٤٢/٨ هـ.**




*فهرسة مكتبة الملك فهد الوطنية أثناء النشر*

**شعبة توعية الجاليات - الزلفي**

كتاب الأذكار- الزلفي

١٠٣ ص؛ ٨ / ١٢ سم

ردمك : ٧- ٢٠ – ٨١٣ – ٩٩٦٠

(النص باللغة التاميلية )

١ – الأدعية والأوراد أ- العنوان

ديوي ٢١٢,٩٣ ١٧/٠٩٤٩

رقم الإيداع : ١٧/٠٩٤٩

ردمك : ٧- ٢٠ – ٨١٣ – ٩٩٦٠

# திக்ருகளின் தொகுப்பு

## முன்னுரை

அல்லாஹ் கூறுகிறான்: நம்பிக்கை கொண்டோரே! அல்லாஹ்வை அதிக மதிகம் நினையுங்கள். காலையிலும் மாலையிலும் அவனைத் துதியுங்கள். (33:41,42) "தமது இறைவனை நினைப் பவனுக்கும், தமது இறைவனை நினைக் காதவனுக்கும் உவமை உயிருள்ள வனையும், உயிரற்றவனையும் போன்ற தாகும்" என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். (புகாரி 6407)

"உங்கள் அமல்களில் மிகச் சிறந்த தும் உங்கள் எஜமானனிடம் மிகத் தூய் மையானதும், உங்களின் தகுதிகளை உயர்த்தக்கூடியதும், தங்கம், வெள்ளியை (இறைவழியில்) செலவு செய்வதை விட மேலானதும், நீங்கள் உங்கள் எதிரி

களுடன் போரிட்டு நீங்கள் அவர்களின் கழுத்தையும் அவர்கள் உங்களின் கழுத்தையும் வெட்டுவதை விடவும் சிறந்த செயலை உங்களுக்கு நான் சொல்லித் தரட்டுமா?" என நபி(ஸல்) அவர்கள் கேட்க, தோழர்கள் ஆம்! என்றனர். "அது தான் அல்லாஹ்வை திக்ர் செய்வது" என நபி(ஸல்) கூறினார்கள். (திர்மிதி 3377)

திக்ர் என்றால் இறை நினைவு, இறைவனைத் துதித்தல், தியானித்தல், இறைவனிடம் பிரார்த்தித்தல் என்று பொருள். இஸ்லாத்தில் இதுவும் ஒரு வணக்கமாக ஆக்கப்பட்டுள்ளது. ஏனெனில் "பிரார்த்தனைதான் வணக்கம்" என நபி (ஸல்) கூறினார்கள். (திர்மிதி 2969)

எனவே இறைவனை திக்ர் செய்வது அல்லாஹ்வும், அவன் தூதரும் கற்றுத் தந்த முறைப்படி அமைய வேண்டும்.

நமது நாடுகளில் ஹா! ஹு! என்றும், ஹு ஹு, என்றும் ஹு ஹு யா மன் ஹு என்றும், ஹக் தூ ஹக் என்றும் அஹ்! அஹ்! என்றும் பொருளற்ற பல்வேறு வார்த்தைகளை திக்ர் என்ற பெயரில் சொல்லிக் கொண்டிருகின்றனர். இவை அனைத்தும் அல்லாஹ்வோ, அவன் தூதரோ சொல்லித் தராதவையாகும். இச்சிறு நூலில் வருகின்ற, அல்லாஹ்வும், அவன் தூதரும் சொல்லித் தந்த திக்ர் களின் பொருளைப் படித்துப் பாருங்கள். என்னே கருத்தாழம்! என்னே கருத்துச் செறிவு!

அதுபோல எண்ணிக்கையிலும் தமது விருப்பம்போல் 4444 என்றும் இன்னும் பலவாறாகவும் கூறி வருகின்றனர். இவ்வளவு பெரிய எண்ணிக்கையை ஒருவர் ஓத முடியாததால் கூலிக்கு

ஆள் பிடித்து அவற்றை ஓதுகின்றனர். அவற்றைக் கை விரல்களால் எண்ண முடியாததால் அதற்காக கடலை, பயறு போன்றவற்றையும், தஸ்பீஹ்மணி, எண் ணுவதற்குப் பயன்படும் கருவி போன்ற வற்றையும் உபயோகப்படுத்துகின்றனர். சின்னஞ்சிறு துஆக்களைக் கூட மனனம் செய்து கொள்ள முயற்சி செய்யாமல் வேறொருவரைக் கொண்டு வந்து ஓதச் சொல்லி அவர் என்ன ஓதினாலும் பொருள் தெரியாமல் ஆமீன் கூறுகின் றனர். இவை அனைத்தும் அல்லாஹ்வோ அவன் தூதரோ காட்டித்தராத பித்அத் தாகும். நபி(ஸல்) தமது கை விரல் களால் தான் எண்ணியுள்ளனர்.

அல்லாஹ் கூறுகிறான்: (நபியே!) உம் இறைவனைக் காலையிலும் மாலை யிலும் மனதிற்குள் பணிவாகவும், அச்சத் துடனும் சொல்லில் உரத்த சப்தமில்லா

மலும் நினைப்பீராக! மறந்திருப்போரில் நீரும் ஒருவராகி விடாதீர். (7:205)

இவ்வசனத்தில் அல்லாஹ், சப்தமின்றி மெதுவாக திக்ரு செய்யும்படி கூறியுள் ளான்.

இந்நூலில் திருக்குர்ஆனிலும் நபி மொழியிலும் வந்திருக்கின்ற ஆதாரப்பூர் வமான துஆக்களும் திக்ருகளுமே இடம் பெற்றுள்ளன. பிரார்த்தனை செய்வதற்கு ஒழுங்குமுறைகளும் அது ஏற்றுக் கொள் ளப்படுவதற்கு சில நிபந்தனைகளும் திருக்குர்ஆனிலும் ஹதீஸ்களிலும் கூறப் பட்டுள்ளன. அவற்றைச் சுருக்கமாக இங்கே குறிப்பிடுகிறோம்:

1. பிரார்த்திப்பவர் மார்க்கத்தில் விலக் கப்பட்ட உணவு, பானங்கள், ஆடைகள் போன்றவற்றை விட்டும் விலகியிருக்க வேண்டும். மார்க்கத்திற்குப் புறம்பான

சம்பாத்தியத்தின் மூலம் பொருளீட்டியி ருக்கலாகாது. ஏனெனில் அல்லாஹ் கூறு கிறான்: நிச்சயமாக அல்லாஹ் (தன்னை) அஞ்சுவோரிடமிருந்தே (எதையும்) ஏற்றுக் கொள்வான். (5:27)

2. அல்லாஹ்விடம் நாம் கேட்டது கிடைக்கவில்லையே என அவசரப்பட்டு துஆக் கேட்பதை விட்டு விடக் கூடாது. மேலும் பாவத்தையோ அல்லது பந்த முறிவையோ பிரார்த்திக்கக் கூடாது.

3. கிடைக்கும் என்ற உறுதியுடன் கேட்க வேண்டும்.

4. ஒருவர் தன் சகோதர முஸ்லிமுக் காக மறைவிலிருந்து கேட்கும் துஆ ஏற்றுக் கொள்ளப்படும்.

5. அநீதியிழைக்கப்பட்டவனின் துஆ வுக்கும் அல்லாஹ்வுக்குமிடையே திரை யில்லை- அது ஏற்றுக் கொள்ளப்படும்.

6. ஸஜ்தாவில் அதிகமதிகம் பிரார்த் தியுங்கள். ஏனெனில் “ஒரு அடியான் தனது இறைவனுக்கு மிகவும் நெருக் கமாக இருப்பது அவன் ஸஜ்தா செய்யும் போது தான். எனவே அதில் அதிகம் துஆ செய்யுங்கள்” என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம் 482)

7. பாங்கு, இகாமத்திற்கு இடையில் கேட்கப்படும் துஆ ஏற்கப்படும்.

8. ஒவ்வொரு தொழுகையின் இறுதி யிலும், இரவின் இறுதிப் பகுதியிலும் கேட்கப்படும் துஆ ஏற்கப்படும்.

9. துஆ செய்யும்போது முதலில் அல்லாஹ்வைப் புகழ்ந்து நபி (ஸல்) அவர்கள் மீது ஸலவாத்து கூறவேண்டும். பின்பு தமக்காவும் தம் பெற்றோர், மனைவி, மக்கள், கணவன் மற்றும்

உற்றார், உறவினர், மற்ற முஸ்லிம்கள் அனைவருக்காகவும் கேட்க வேண்டும்.

10. தொழுகை, நோன்பு, இ.ஃ.திகா.ஃ.ப், தான தருமங்கள் போன்ற எல்லா நல்ல காரியங்களைச் செய்த பின்பு துஆக் கேட்கலாம். இப்ராஹீம்(அலை) அவர்கள் க.ஃ.பாவைக் கட்டி முடித்த பின் துஆ செய்துள்ளார்கள். (பார்க்க 2:127)

11. அல்லாஹ்வும் அவன் தூதுரும் நமக்கு கற்றுத் தந்த திக்ரு, துஆக்களை எவ்வித மாற்றமும் இன்றி அப்படியே ஓத வேண்டும்.

12. தொழுகைக்குப் பின்பும் மரணித் தவர்களை அடக்கிய பின்னரும் இன்னும் பல சந்தர்ப்பங்களிலும் ஒருவர் துஆ ஓத மற்றவர்கள் ஆமீன் கூறும் நம் நாட்டுப் பழக்கத்திற்கு எந்த ஆதாரமுமில்லை.

13. பலர் கூடியிருந்தும் இறைவனை நினைக்கலாம். “ஒரு கூட்டம் ஓரிடத்தில் அமர்ந்து அல்லாஹ்வை நினைவுகூர்ந் தால் வானவர்கள் அவர்களை சூழ்ந்து கொள்கின்றனர். இறையருள் அவர்களை வளைத்துக் கொள்கிறது. அவர்கள் மீது சாந்தி இறங்குகிறது. மேலும் அவர் களைப் பற்றி அல்லாஹ் தன்னிடமுள்ள (வான) வர்களிடம் (பெறுமையாக) எடுத்துக் கூறுகிறான்” என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம் 2700)

14. திக்ரில் மிக உயர்ந்தது திருக் குர்ஆன் ஆகும். இதில் அல்லாஹ்வின் வார்த்தைகள் அடங்கியுள்ளன. தொழுகை யையும் அல்லாஹ் திக்ர் என்றே குறிப்பிடு கிறான். அல்லாஹ் நம் அனைவரையும் நேர்வழியில் வாழச் செய்வானாக!

**காலை, மாலை திக்ருகள்**

1. குல் ஹுவல்லாஹு அஹத், குல் அஊது பிரப்பில் பலக், குல் அஊது பிரப்பின் நாஸ். (3 முறை) (திர்மிதி 3575)

2. லாஇலாஹ இல்லல்லாஹு வஹ் தஹு லா ஷரீக்கலஹு லஹுல் முல்கு வலஹுல் ஹம்து வஹுவ அலாக் குல்லி ஷையின் கதீர். (1 அல்லது 10 அல்லது 100 தடவை)(இப்னுமாஜா 3867, முஸ்லிம் 2693, புகாரி 3293)

لَا إِلَهَ إِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيكَ لَهُ لَهُ الْمُلْكُ

وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ

(பொருள்: வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு யாதொரு இணையுமில்லை. ஆட்சியதி காரம் அவனுக்கே. புகழனைத்தும்

அவனுக்கே உரியது.அவன் அனைத்தின் மீதும் ஆற்றலுள்ளவன்)

3. சுப்ஹானல்லாஹி வபிஹம்திஹி. (100 தடவை)(முஸ்லிம் 2692)

سُبْحَانَ اللهِ وَبِحَمْدِهِ

(பொருள்: அல்லாஹ்வைப் புகழ்வதுடன் துதிக்கவும் செய்கிறேன்.)

4. பிஸ்மில்லாஹில்லதீ லா யழுர்ரு மஅஸ்மிஹி ஷைஉன் ஃபில்அர்ழி வலா ஃபிஸ்ஸமாயி வஹுவஸ் ஸமீவுல் அலீம் (3 தடவை) (திர்மிதி 3388)

بِسْمِ اللهِ الَّذِي لَا يَضُرُّ مَعَ اسْمِهِ شَيْءٌ فِي الْأَرْضِ وَلَا فِي السَّمَاءِ وَهُوَ السَّمِيعُ الْعَلِيمُ

(பொருள்: அல்லாஹ்வின் பெயரால் (தொடங்குகிறேன்)அவன் எத்தகையவன் எனில் அவனது பெயருடன் இப்புவியிலும்

வானத்திலும் எந்தப் பொருளும் தீங்கு அளித்திட முடியாது. அவன் யாவற் றையும் கேட்பவன்; அறிபவன்.)

5. அவூது பிகலிமாத்தில்லாஹித் தாம் மாத்தி மின் ஷர்ரிமா கலக் (1 அல்லது 3 தடவை) (முஸ்லிம் 2709)

أَعُوذُ بِكَلِمَاتِ اللهِ التَّامَّاتِ مِنْ شَرِّ مَا خَلَقَ

(பொருள்: அல்லாஹ்வின் பரிபூரண மான வார்த்தைகளைக் கொண்டு அவன் படைத்தவற்றின் தீங்குகளிலிந்து பாது காவல் தேடுகிறேன்.)

6. ரழீத்து பில்லாஹி ரப்பன் வபில் இஸ்லாமி தீனன் வபி முஹம்மதின் நபிய்யன். (இப்னுமாஜா 3870)

رَضِيتُ بِاللهِ رَبًّا وَبِالْإِسْلَامِ دِينًا وَبِمُحَمَّدٍ نَبِيًّا

(பொருள்: அல்லாஹ்வை இறைவ னாகவும் இஸ்லாத்தை மார்க்கமாகவும்

முஹம்மத்(ஸல்)அவர்களை நபியாகவும் பொருந்திக் கொண்டேன்.)

7. ஹஸ்பியல்லாஹு லாஇலாஹ இல்லா ஹுவ, அலைஹி தவக்கல்து வஹுவ ரப்புல் அர்ஷில் அளீம். (7 தடவை) (அபூதாவூது 5081)

حَسْبِيَ اللهُ لَا إِلَهَ إِلَّا هُوَ عَلَيْهِ تَوَكَّلْتُ

وَهُوَ رَبُّ الْعَرْشِ الْعَظِيمِ

(பொருள்: அல்லாஹ்வே எனக்குப் போதுமானவன். அவனைத் தவிர வணக் கத்திற்குரியவன் வேறு யாருமில்லை. அவனையே முழுவதும் சார்ந்துள்ளேன். அவன் மகத்தான அர்ஷின் இறைவன்.)

8. அஸ்பஹ்னா அலா ஃபித்ரதில் இஸ்லாம் வஅலா கலிமதில் இக்லாஸ் வஅலா தீனி நபிய்யினா முஹம்மதின் (ஸல்) வஅலா மில்லத்தி அபீனா

இப்ராஹீம ஹனீ∴பன் முஸ்லிமன் வமா கான மினல் முஷ்ரிகீன். (அஹ்மத் 20219, ஸஹீஹுல் ஜாமிவு)

أَصْبَحْنَا عَلَى فِطْرَةِ الْإِسْلَامِ وَعَلَى كَلِمَةِ الْإِخْلَاصِ وَعَلَى دِينِ نَبِيِّنَا مُحَمَّدٍ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ وَعَلَى مِلَّةِ أَبِينَا إِبْرَاهِيمَ حَنِيفًا مُسْلِمًا وَمَا كَانَ مِنْ الْمُشْرِكِينَ

**குறிப்பு:** இந்த திக்ரை மாலையில் ஓதும்போது அஸ்பஹ்னா என்ற இடத்தில் அம்ஸைனா என மாற்றி மற்றவற்றை அப்படியே கூறிக் கொள்ள வேண்டும்.

(பொருள்: இஸ்லாத்தின் இயல்பு நிலையின் மீதும் ஏகத்துவக் கலிமாவின் மீதும் எங்கள் நபி முஹம்மத் (ஸல்) அவர்களின் மார்க்கத்தின் மீதும் எங்கள் தந்தை இப்ராஹீம்(அலை) அவர்களின் வழிமுறையின் மீதும் காலை நேரத்தை

அடைந்துவிட்டோம். இப்ராஹீம் உண்மை வழியில் நின்ற முஸ்லிமாக இருந்தார். அவர் இணைவைப்போரில் ஒருவராக இருக்கவில்லை.)

9. அஸ்பஹ்னா வஅஸ்பஹல் முல்கு லில்லாஹ் வல்ஹம்து லில்லாஹ் லாஇலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீக்கலஹு லஹுல் முல்கு வலஹுல் ஹம்து வஹுவ அலா குல்லி ஷைஇன் கதீர். ரப்பி அஸ்அலுக கைர மா∴பீ ஹாதல் யவ்மி வகைரமா ப∴தாஹ். வஅவூதுபிக மின் ஷர்ரி மா∴பீ ஹாதல் யவ்மி வஷர்ரிமா ப∴தாஹ். ரப்பி அவூதுபிக மினல் கஸி, வசூயில் கிபரி, ரப்பி அவூதுபிக மின் அதாபின் ∴பின்நாரி வஅதாபின் ∴பில் கப்ர். (முஸ்லிம் 2723)

أَصْبَحْنَا وَأَصْبَحَ الْمُلْكُ للهِ وَالْحَمْدُ للهِ لَا إِلَهَ إِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ رَبِّ أَسْأَلُكَ خَيْرَ مَا فِي هَذَا الْيَوْمِ وَخَيْرَ مَا بَعْدَهُ وَأَعُوذُ بِكَ مِنْ شَرِّ مَا فِي هَذَا الْيَوْمِ وَشَرِّ مَا بَعْدَهُ رَبِّ أَعُوذُ بِكَ مِنْ الْكَسَلِ وَسُوءِ الْكِبَرِ رَبِّ أَعُوذُ بِكَ مِنْ عَذَابٍ فِي النَّارِ وَعَذَابٍ فِي الْقَبْرِ

இதனையே மாலையில் பின்வருமாறு ஓத வேண்டும்.

أَمْسَيْنَا وَأَمْسَى الْمُلْكُ للهِ وَالْحَمْدُ للهِ لَا إِلَهَ إِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ رَبِّ أَسْأَلُكَ خَيْرَ مَا فِي هَذِهِ اللَّيْلَةِ وَخَيْرَ مَا بَعْدَهَا وَأَعُوذُ بِكَ مِنْ شَرِّ مَا فِي هَذِهِ اللَّيْلَةِ وَشَرِّ مَا

بَعْدَهَا رَبِّ أَعُوذُ بِكَ مِنْ الْكَسَلِ وَسُوءِ الْكِبَرِ رَبِّ أَعُوذُ بِكَ مِنْ عَذَابٍ فِي النَّارِ وَعَذَابٍ فِي الْقَبْرِ أَصْبَحْنَا وَأَصْبَحَ الْمُلْكُ لِلّٰهِ

(பொருள்: நாங்கள் காலைப் பொழுதிற்கு வந்துவிட்டோம். ஆட்சியதிகாரம் அல்லாஹ்வுக்கே ஆகிவிட்டது. எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே. வணக்கத்திற்குரியவன் அவனைத் தவிர வேறு யாருமில்லை. அவன் தனித்தவன், அவனுக்கு யாதொரு இணையுமில்லை. ஆட்சியும் அவனுக்கே. அனைத்துப் புகழும் அவனுக்கே. அவன் யாவற்றின் மீதும் பேராற்றலுடையவன். என் இரட்சகனே! இந்தப் பகலில் உள்ள நன்மையையும் அதன் பின்னருள்ள நன்மையையும் நான் உன்னிடம் வேண்டுகிறேன். இப்பகலில் உள்ள தீமையை விட்டும் இதற்குப் பின்

னுள்ள தீமையை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். இரட்சகனே! சோம்பலை விட்டும் முதுமையின் தீமையை விட்டும் உன்னிடம் பாது காப்புத் தேடுகிறேன் என் இரட்சகனே! நரகத்தின் வேதனையை விட்டும், மண் ணறையின் வேதனையை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்.)

10. நபி(ஸல்)அவர்கள் தமது தோழர் களுக்குக் கற்றுத் தந்தார்கள்: உங்களில் ஒருவர் காலை நேரத்தை அடைந்தால்

அல்லாஹும்ம பிக அஸ்பஹ்னா வபிக அம்ஸைனா வபிக நஹ்யா வபிக நமூத்து வஇலைக்கன் நுஷூர். என்றும்,

اللَّهُمَّ بِكَ أَصْبَحْنَا وَبِكَ أَمْسَيْنَا وَبِكَ نَحْيَا

وَبِكَ نَمُوتُ وَإِلَيْكَ النُّشُورُ

மாலைப் பொழுதை அடைந்தால்,

அல்லாஹு"ம்ம பிக அம்ஸைனா வபிக அஸ்பஹ்னா வபிக நஹ்யா வபிக நமூத்து வஇலைகல் மஸீர் என்றும்,

اللَّهُمَّ بِكَ أَمْسَيْنَا وَبِكَ أَصْبَحْنَا وَبِكَ نَحْيَا وَبِكَ نَمُوتُ وَإِلَيْكَ الْمَصِيرُ

கூறட்டும். (திர்மிதி 3391)

(பொருள்: இறைவா! உன் மூலமே காலைப் பொழுதையும் மாலைப் பொழுதையும் அடைந்தோம். உன் மூலமே உயிர் வாழ்கிறோம். மரணமடைவோம். எழுப்பப்படுவதும் திரும்ப வருவதும் உன்னிடமே.)

11. அல்லாஹு"ம்ம இன்னீ அஸ்பஹ்து உஷ்ஹிதுக வஉஷ்ஹிது ஹமல(த்)த அர்ஷிக வமலாயிகதக வஜமீஅ கல்கிக அன்னக்க அன்தல்லாஹு" லாஇலாஹ

இல்லா அன்த வஹ்தக லாஷரீக்க லக வஅன்ன முஹம்மதன் அப்துக வரசூலுக. (1 முதல் 4 தடவை) (திர்மிதி 3501)

اللَّهُمَّ إِنِّي أَصْبَحْتُ أُشْهِدُكَ وَأُشْهِدُ حَمَلَةَ عَرْشِكَ وَمَلَائِكَتَكَ وَجَمِيعَ خَلْقِكَ أَنَّكَ أَنْتَ اللهُ لَا إِلَهَ إِلَّا أَنْتَ وَحْدَكَ لَا شَرِيكَ لَكَ وَأَنَّ مُحَمَّدًا عَبْدُكَ وَرَسُولُكَ

(பொருள்: இறைவா! நான் காலைப் பொழுதை அடைந்து விட்டேன், உன்னையும் உனது அர்ஷைச் சுமக்கும் மலக்குகளையும் உன்னுடைய இதர மலக்குகளையும் உனது எல்லா படைப்பினங்களையும் சாட்சியாக்கி கூறுகிறேன்: நீயே அல்லாஹ். வணக்கத்திற்குரியவன் உன்னைத் தவிர வேறு யாருமில்லை. நீ தனித்தவன். உனக்கு இணை, துணை

இல்லை.முஹம்மத நபி அவர்கள் உன் அடியாரும் உன் தூதரும் ஆவார்கள்.)

**குறிப்பு:** இதையே மாலையில் அல்லா ஹு"ம்ம இன்னீ அம்ஸை(த்)து எனத் தொடங்கி கூற வேண்டும்.

12. அல்லாஹு"ம்ம மா அஸ்பஹ பீ மின் நி.ஃ.மதின் அவ் பிஅஹதிம் மின் .ஃ.கல்கிக .ஃ.பமின்க வஹ்தக லா ஷரீக்க லக .ஃ.பலகல் ஹம்து வலகஷ் ஷு"க்ர்.

اللَّهُمَّ مَا أَصْبَحَ بِي مِنْ نِعْمَةٍ أَوْ بِأَحَدٍ مِنْ خَلْقِكَ فَمِنْكَ وَحْدَكَ لَا شَرِيكَ لَكَ فَلَكَ الْحَمْدُ وَلَكَ الشُّكْرُ

**குறிப்பு:** இதை மாலையில் அல்லா ஹு"ம்ம மா அஸ்பஹ என்பதற்குப் பகர மாக அல்லாஹு"ம்ம மா அம்ஸா எனக் கூற வேண்டும். (அபூதாவூத் 5073)

(பொருள்: இறைவா! இந்தக் காலைப் பொழுதில் என் மீது அல்லது உனது படைப்பினத்தில் எவர் மீதாவது ஏதேனும் அருட்கொடை பொழிந்திருந்தால் அது உன்னிடமிருந்து கிடைத்ததாகும். நீ தனித்தவன். உனக்கு யாதொரு இணையுமில்லை. புகழ் அனைத்தும் உனக்கே. எல்லா நன்றியும் உனக்கே.)

13. யாஹய்யு யாகய்யூம் பிக அஸ்த ஃகீஸு, ஃபஅஸ்லிஹ்லீ ஷஃனீ வலா தகில்னீ இலா நஃப்ஸீ தரஃபத ஐன். (ஸஹீஹ் அத்தர்கீப் வத்தர்ஹீப்)

يَا حَيُّ يَا قَيُّوْمُ بِرَحْمَتِكَ أَسْتَغِيْثُ فَأَصْلِحْ لِيْ شَأْنِيْ كُلَّهُ وَلاَ تَكِلْنِيْ إِلَى نَفْسِيْ طَرَفَةَ عَيْنٍ

(பொருள்: நித்திய ஜீவனே! (பேரண்டம் முழுவதையும்) நிர்வகிப்பவனே! உன் அருளைக் கொண்டு இரட்சிக்கத் தேடு

கிறேன். என் காரியங்களைச் சீராக்கு வாயாக. கண் இமைக்கும் நேரத்திற்குக் கூட என்னை (உனது பாதுகாப்பை விடுத்து) என் பொறுப்பில் விட்டு விடாதே.)

14. அல்லாஹும்ம ஆ.ஃபினீ .ஃபீ பதனீ அல்லாஹும்ம ஆ.ஃபினீ .ஃபீ ஸம்ஈ, அல்லாஹும்ம ஆ.ஃபினீ .ஃபீ பஸரீ லாஇலாஹ இல்லா அன்த. (3 தடவை) (அபூதாவூத் 5090, அஹ்மத் 19534)

اللَّهُمَّ عَافِنِي فِي بَدَنِي اللَّهُمَّ عَافِنِي فِي سَمْعِي

اللَّهُمَّ عَافِنِي فِي بَصَرِي لَا إِلَهَ إِلَّا أَنْتَ

(பொருள்: இறைவா! என் உடலிலும் எனது பார்வையிலும் எனது செவிப் புலனிலும் நலன் அருள்வாயாக!)

15. அல்லாஹும்ம இன்னீ அஊதுபிக மினல் கு.ஃப்ரி வல் .ஃபக்ரி வஅஊது

பிக மின் அதாபில் கப்ரி லாஇலாஹ இல்லா அன்த. (3 தடவை)

(அபூதாவூத் 5090, அஹ்மத் 19534)

اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ الْكُفْرِ وَالْفَقْرِ وَأَعُوذُ بِكَ مِنْ عَذَابِ الْقَبْرِ لَا إِلَهَ إِلَّا أَنْتَ

(பொருள்: இறைவா! இறைநிராகரிப்பு, வறுமை, மண்ணறை வேதனை ஆகிய வற்றை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். வணக்கத்திற்குரியவன் உன்னைத் தவிர வேறு யாருமில்லை.)

16. அல்லாஹும்ம இன்னீ அஸ் அலுகல் ஆ.ஃ.பியத .ஃ.பித்துன்யா வல் ஆ.ஃ.கிரா, அல்லாஹும்ம இன்னீ அஸ் அலுகல் அ.ஃ.ப்வ வல்ஆ.ஃ.பியத .ஃ.பீ தீனி வதுன்யாய வஅஹ்லீ வமாலீ, அல்லாஹும்மஸ்துர் அவ்ராத்தீ வஆமின்

ரவ்ஆத்தி அல்லாஹும்ம மஹ்.ஃ.பள்னீ மின் பைனி யதய்ய வமின் .ஃ.கல்.ஃ.பீ வஅன் யமீனீ வஅன் ஷிமாலீ வமின் .ஃ.பவ்கீ வஅஊது பிஅளமதிக அன் உக் தால மின் தஹ்தீ. (இப்னுமாஜா 3871)

اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ الْعَافِيَةَ فِي الدُّنْيَا وَالْآخِرَةِ اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ الْعَفْوَ وَالْعَافِيَةَ فِيْ دِيْنِيْ وَدُنْيَايَ وَأَهْلِيْ وَمَالِيْ اللَّهُمَّ اسْتُرْ عَوْرَاتِيْ وَآمِنْ رَوْعَاتِيْ اللَّهُمَّ احْفَظْنِيْ مِنْ بَيْنِ يَدَيَّ وَمِنْ خَلْفِيْ وَعَنْ يَمِيْنِيْ وَعَنْ شِمَالِيْ وَمِنْ فَوْقِيْ وَأَعُوْذُ بِعَظَمَتِكَ أَنْ أُغْتَالَ مِنْ تَحْتِيْ

(பொருள்: இறைவா! இம்மை, மறுமை யின் நலனை உன்னிடம் வேண்டுகிறேன். இறைவா! எனது மார்க்கம், என் உலக வாழ்வு, எனது குடும்பம், எனது செல்வம் யாவற்றிலும் மன்னிப்பையும் நலனையும்

உன்னிடம் யாசிக்கிறேன். இறைவா! என் குறைகளை மறைப்பாயாக. என் அச்சங்களை அகற்றி எனக்கு அமைதி தருவாயாக. இறைவா! எனக்கு முன் பிருந்தும் பின்னாலிருந்தும் எனது வலது புறமிருந்தும், இடது புறமிருந்தும், எனக்கு மேலிருந்தும் எனக்கு பாதுகாப்பு அளிப் பாயாக! கீழே இருந்தும் எதிர்பாராத விதமாக நான் கொல்லப்படுவதிலிருந்து உன் கண்ணியத்தைக் கொண்டு நான் பாதுகாப்புத் தேடுகிறேன்.)

17. அல்லாஹும்ம ஃபாத்திரஸ்ஸமா வாத்தி வல்அர்ழி, ஆலிமல் கைபி வஷ் ஷஹாதாதி, ரப்ப குல்லி ஷைஇன் வமலீக்கஹு அஷ்ஹது அல்லாஇலாஹ இல்லா அன்த. அவூது பிக மின் ஷர்ரி நஃப்ஸீ, வஷர்ரி ஷைத்தானி வஷிர்க்

கிஹி, வஅன் அக்தரி.ஃ.ப அலா ந.ஃ.ப்ஸீ சூஅன் அவ் அஜுர்ருஹு இலா முஸ்லிம். (திர்மிதி 3529 அஹ்மத் 6555)

اللَّهُمَّ فَاطِرَ السَّمَوَاتِ وَالْأَرْضِ عَالِمَ الْغَيْبِ وَالشَّهَادَةِ رَبَّ كُلِّ شَيْءٍ وَمَلِيكَهُ أَشْهَدُ أَنْ لَا إِلَهَ إِلَّا أَنْتَ أَعُوذُ بِكَ مِنْ شَرِّ نَفْسِي وَشَرِّ الشَّيْطَانِ وَشِرْكِهِ وَأَنْ أَقْتَرِفَ عَلَى نَفْسِي سُوءًا أَوْ أَجُرَّهُ إِلَى مُسْلِمٍ

(பொருள்: இறைவா! வானங்களையும் பூமியையும் படைத்தவனே! மறைவானவை, வெளிப்படையானவை அனைத்தையும் அறிந்தவனே! அனைத்துப் பொருட்களின் இறைவனும் அரசனுமானவனே! வணக்கத்திற்குரியவன் உன்னைத் தவிர வேறு யாருமில்லை என நான் சாட்சியம் கூறுகிறேன். எனது மனத்தின் தீமையை விட்டும், ஷைத்

தானின் தீங்கு மற்றும் அவனது ஷிர்க்கை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடு கிறேன். மேலும் எனக்கோ பிற முஸ்லி முக்கோ நான் தீங்கு செய்வதை விட்டும் பாதுகாப்புத் தேடுகிறேன்.)

18. அல்லாஹு‍ம்ம இன்னீ அஸ் அலுக இல்மன் நா.ஃ.பிஅன் வரிஸ்கன் தய்யிபன் வஅமலன் முதகப்பலன்.

اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ عِلْمًا نَافِعًا وَرِزْقًا طَيِّبًا وَعَمَلًا مُتَقَبَّلًا

(பொருள்: இறைவா! பயனுள்ள கல்வி, தூய- ஹலாலான உணவு, ஏற்றுக் கொள் ளப்படும் செயல் ஆகியவற்றை உன்னி டம் யாசிக்கிறேன்.) (இப்னுமாஜா 925)

19. அல்லாஹு‍ம்ம அன்த ரப்பீ லா இலாஹ இல்லா அன்த கலக்தனீ வஅன அப்துக வஅன அலா அஹ்திக வவ.ஃ.திக மஸ்தத.ஃ.து அவூதுபிக மின்ஷர்ரிமா

ஸன.்.து, அபூவுலக பிநி.்.மதிக அலய்ய. வஅபூவுலக பிதன்பீ .்.பக்.்.பிர்லீ .்.பஇன்னஹு லாயக்.்.பிருத்துனூப இல்லா அன்த.

اللَّهُمَّ أَنْتَ رَبِّي لَا إِلَهَ إِلَّا أَنْتَ خَلَقْتَنِي وَأَنَا عَبْدُكَ وَأَنَا عَلَى عَهْدِكَ وَوَعْدِكَ مَا اسْتَطَعْتُ أَعُوذُ بِكَ مِنْ شَرِّ مَا صَنَعْتُ أَبُوءُ لَكَ بِنِعْمَتِكَ عَلَيَّ وَأَبُوءُ لَكَ بِذَنْبِي فَاغْفِرْ لِي فَإِنَّهُ لَا يَغْفِرُ الذُّنُوبَ إِلَّا أَنْتَ

(பொருள்: யா அல்லாஹ்! நீயே என் இரட்சகன். உன்னைத் தவிர வணக்கத் திற்குரியவன் வேறு யாருமில்லை. நீயே என்னைப் படைத்தாய். நான் உனது அடிமை. நான் என்னால் முடிந்த வரை உனது உடன்படிக்கை மற்றும் வாக்குறு தியின் மீது நிலைத்திருக்கிறேன். நான் செய்த செயல்களின் தீங்கை விட்டு உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். நீ

எனக்கு அளித்த அருட்கொடைகளையும் ஒப்புக் கொள்கிறேன். நான் செய்த பாவங்களையும் ஏற்றுக் கொள்கிறேன். எனவே என்னை மன்னிப்பாயாக. பாவங் களை மன்னிப்பவன் உன்னைத் தவிர வேறு யாருமில்லை.) (புகாரி 6323)

20. அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் வஅலா ஆலி முஹம்மதின் கமா ஸல்லைத்த அலா இப்ராஹீம வஅலா ஆலி இப்ராஹீம இன்னக்க ஹமீதும் மஜீத் அல்லாஹும்ம பாரிக் அலா முஹம்மதின் வஅலா ஆலி முஹம் மதின் கமா பாரக்த அலா இப்ராஹீம வஅலா ஆலி இப்ராஹீம இன்னக ஹமீதும் மஜீத்.

اللَّهُمَّ صَلِّ عَلَى مُحَمَّدٍ وَعَلَى آلِ مُحَمَّدٍ كَمَا صَلَّيْتَ
عَلَى إِبْرَاهِيمَ وَعَلَى آلِ إِبْرَاهِيمَ إِنَّكَ حَمِيدٌ مَجِيدٌ

اللَّهُمَّ بَارِكْ عَلَى مُحَمَّدٍ وَعَلَى آلِ مُحَمَّدٍ كَمَا بَارَكْتَ عَلَى إِبْرَاهِيمَ وَعَلَى آلِ إِبْرَاهِيمَ إِنَّكَ حَمِيدٌ مَجِيدٌ

(பொருள்: இறைவா! இப்ராஹீம் (அலை) மீதும் அவரது குடும்பத்தினர் மீதும் நீ அருள் புரிந்ததுபோல முஹம்மது (ஸல்) மீதும் அவரது குடும்பத்தினர் மீதும் அருள் புரிவாயாக! நிச்சயமாக நீ புகழுக்கும் மாட்சிமைக்கும் உரியவன். அதுபோல இப்ராஹீம் (அலை) மீதும் அவரது குடும்பத்தினர் மீதும் அபிவிருத் தியைப் பொழிந்தது போல முஹம்மது (ஸல்) மீதும் அவரது குடும்பத்தினர் மீதும் அபிவிருத்தியைப் பொழிவாயாக! நிச்சயமாக நீ புகழுக்கும் மாட்சிமைக்கும் உரியவன்.)

**தூங்கி விழித்ததும்**

21. அல்ஹம்து லில்லா ஹில்லதீ ஆ.ஃ.பானீ வரத்த அலைய்ய ரூஹீ வஅதின லீ பிதிக்ரிஹ். (திர்மிதி 3401)

الْحَمْدُ لله الَّذِي عَافَانِي فِي جَسَدِي وَرَدَّ عَلَيَّ رُوحِي وَأَذِنَ لِي بِذِكْرِهِ

(பொருள்: அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும். அவனே என் உடலுக்கு சுகத்தை வழங்கி என் உயிரைத் திருப்பித் தந்து அவனையே நினைவுகூர அனுமதித்தான்.)

அல்லது பின்வரும் திக்ரை ஓதலாம்: அல்ஹம்து லில்லாஹில்லதீ அஹ் யானா பஅதாமா அமாத்தனா வஇலை ஹின் நுஷூர் (புகாரி 6314)

الْحَمْدُ للهِّ الَّذِي أَحْيَانَا بَعْدَ مَا أَمَاتَنَا وَإِلَيْهِ النُّشُورُ

(பொருள்: எல்லாப் புகழும் அல்லாஹ் வுக்கே! அவனே நம்மை மரணம் எனும்

தூக்கத்தில் ஆழ்த்திய பின் உயிர்பெற்றெழச் செய்தான். மேலும் (மறுமையில்) மீண்டும் எழுப்பப்பட்டு அவனிடமே செல்ல வேண்டியுள்ளது.)

22. அல்லாஹு‌ம்ம அன்த ரப்பீ லா இலாஹ இல்லா அன்த கலக்தனீ வஅன அப்துக வஅன அலா அஹ்திக வவ.்.திக மஸ்த்தத.்.து அவூதுபிக மின்ஷர்ரி மா ஸன.்.து, அபூவுலக பிநி.்.மதிக அலய்ய. வஅபூவு லக பிதன்பீ .்.பக்.்.பிர்லீ .்.பஇன்னஹு லா யக்.்.பிருத்துனூப இல்லா அன்த. (இதன் பொருள் முன்னர் பார்க்க)

اللَّهُمَّ أَنْتَ رَبِّي لَا إِلَهَ إِلَّا أَنْتَ خَلَقْتَنِي وَأَنَا عَبْدُكَ وَأَنَا عَلَى عَهْدِكَ وَوَعْدِكَ مَا اسْتَطَعْتُ أَعُوذُ بِكَ مِنْ شَرِّ مَا صَنَعْتُ أَبُوءُ لَكَ بِنِعْمَتِكَ عَلَيَّ وَأَبُوءُ لَكَ بِذَنْبِي فَاغْفِرْ لِي فَإِنَّهُ لَا يَغْفِرُ الذُّنُوبَ إِلَّا أَنْتَ

என்று கூறுவது ஸய்யிதுல் இஸ்தி.ஃக் ஃபார் (பாவமன்னிப்புத் தேடுவதில் தலையாயது) என நபி(ஸல்) கூறியுள்ளார்கள். “இதை ஒருவர் உறுதியாக நம்பி காலையில் கூறி அன்று மாலைக்குள் இறந்து விட்டால் அவர் சொர்க்கவாசி. இரவில் கூறி விடிவதற்குள் இறந்து விட்டால் அவரும் சொர்க்கவாசி” என நபி(ஸல்) கூறினர்கள். (புகாரி 6306)

23. குல்ஹுவல்லாஹு அஹத், குல் அவூது பிரப்பில் ஃபலக், குல் அவூது பிரப்பின் நாஸ் ஆகிய சூராக்களை மாலையிலும் காலையிலும் 3 முறை நீ ஓதி வந்தால் அவை எல்லா வகையிலும் உனக்குப் போதுமாகும். (நபிமொழி) (அபூதாவூத் 5082, நஸயீ 5333)

24. சுப்ஹானல்லாஹி வபிஹம்திஹி அதத கல்கிஹி வரிழா ந.்.ப்ஸிஹி வஸினத அர்ஷிஹி வமிதாத கலிமாத்திஹி

(இதை தினமும் காலையில் மூன்று முறை கூற வேண்டும். (முஸ்லிம் 2726)

سُبْحَانَ اللهِ وَبِحَمْدِهِ عَدَدَ خَلْقِهِ وَرِضَا نَفْسِهِ

وَزِنَةَ عَرْشِهِ وَمِدَادَ كَلِمَاتِهِ

(பொருள்: அல்லாஹ்வைப் புகழ்வதுடன் தூயவன் எனத் துகிக்கவும் செய்கிறேன். அவனது படைப்பினங்களின் எண்ணிக்கை அளவிற்கு! அவன் மனதின் திருப்தி அளவிற்கு! அவன் அர்ஷின் எடை அளவிற்கு! அவனது வார்த்தைகளை எழுதும் மை அளவிற்கு!)

**நன்மையை நாடித் தொழுதும்போது**

25. “உங்களில் யாரேனும் ஒரு காரியத்தைச் செய்ய நாடினால் இரண்டு

ரக்அத் நபில் தொழுகை தொழுது பின் வருமாறு இறைவனிடம் வேண்டவும்” என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அல்லாஹு்ம்ம இன்னீ அஸ்தகீருக பிஇல்மிக வஅஸ்தக்திருக பிகுத்ரதிக வஅஸ்அலுக மின் ஃபழ்ழிகல் அழீம் ஃப இன்னக தக்திரு வலாஅக்திரு வதஃலமு வலா அஃலமு வஅன்த்த அல்லா முல் ஃகுயூப், அல்லாஹு்ம்ம இன்குன்த்த தஃலமு அன்ன ஹாதல் அம்ர கைய் ருன்லீ ஃபீ தீனீ வமஆஷீ வஆகிபதி அம்ரீ அவ் ஃபீ ஃஆஜிலி அம்ரி வஆஜி லிஹி ஃபக்துர்ஹு் லீ வயஸ்ஸிர்ஹு் லீ, ஸு்ம்ம பாரிக்லீ ஃபீஹி, வஇன் குன்த்த தஃலமு அன்ன ஹாதல் அம்ர ஷர்ருன்லீ ஃபீ தீனீ வமஆஷீ வஆகிபதி அம்ரீ அவ் ஃபீ ஃஆஜிலி அம்ரி வஆஜிலிஹி ஃபஸ் ரிஃப்ஹு் அன்னீ வஸ்ரிஃப்னீ அன்ஹு்,

வக்துர்லீ அல்கைய்ர ஹைஸு கான ஸும்ம ரள்ளினீ பிஹி. (புகாரி 6382)

اللَّهُمَّ إِنِّي أَسْتَخِيرُكَ بِعِلْمِكَ وَأَسْتَقْدِرُكَ بِقُدْرَتِكَ وَأَسْأَلُكَ مِنْ فَضْلِكَ الْعَظِيمِ فَإِنَّكَ تَقْدِرُ وَلَا أَقْدِرُ وَتَعْلَمُ وَلَا أَعْلَمُ وَأَنْتَ عَلَّامُ الْغُيُوبِ اللَّهُمَّ إِنْ كُنْتَ تَعْلَمُ أَنَّ هَذَا الْأَمْرَ خَيْرٌ لِي فِي دِينِي وَمَعَاشِي وَعَاقِبَةِ أَمْرِي أَوْ فِي عَاجِلِ أَمْرِي وَآجِلِهِ فَاقْدُرْهُ لِي وَإِنْ كُنْتَ تَعْلَمُ أَنَّ هَذَا الْأَمْرَ شَرٌّ لِي فِي دِينِي وَمَعَاشِي وَعَاقِبَةِ أَمْرِي أَوْ فِي عَاجِلِ أَمْرِي وَآجِلِهِ فَاصْرِفْهُ عَنِّي وَاصْرِفْنِي عَنْهُ وَاقْدُرْ لِي الْخَيْرَ حَيْثُ كَانَ ثُمَّ رَضِّنِي بِهِ

பொருள்: இறைவா! உனது ஞானத்தைக் கொண்டு உன்னிடம் நன்மையை யாசிக்கிறேன். உனது ஆற்றலைக்

கொண்டு வல்லமையை வேண்டுகிறேன். மேலும் உன்னிடம் உனது மகத்தான அருளை வேண்டுகிறேன். ஏனெனில் நீ ஆற்றல் பெற்றவன். என்னிடம் எந்த ஆற்றலும் இல்லை. நீ நன்கு அறிபவன். நான் எதையும் அறியாதவன். நீயே மறை வானவற்றை மிக அறிந்தவனாவாய். இறைவா! இந்தக் காரியம் (இங்கு தனது காரியத்தைக் குறிப்பிடுக.) எனக்கு- எனது தீனுக்கும், எனது வாழ்க்கைக்கும், எனது விவகாரத்தின் முடிவுக்கும், எனது உடன டியான, தாமதமான விவகாரத்திற்கும் நன்மையானது என நீ அறிந்தால் அதை என் விதியில் சேர்த்து அதை எனக்கு எளிதாக்கி வைப்பாயாக! பின்பு அதில் எனக்கு பாக்கியம் அருள்வாயாக. இந்தக் காரியம் எனக்கு, எனது தீனுக்கும், எனது வாழ்க்கைக்கும், எனது விவகாரத்தின் முடிவுக்கும், எனது உடனடியான, தாமத

மான விவகாரத்திற்கும் தீமையானது என நீ அறிந்தால் என்னை விட்டும் அதையும் அதை விட்டும் என்னையும் தடுப்பாயாக. மேலும் எனது விதியில் நன்மையைச் சேர்ப்பாயாக! அது எங்கிருந்தாலும் சரியே. பிறகு அதில் எனக்குத் திருப்தி ஏற்படுத்தித் தருவாயாக.)

**தொழுது முடித்ததும்**

26. நபி(ஸல்) அவர்கள் தொழுது முடித்ததும் அஸ்த.்.க்.்.பிருல்லாஹ் என்று மூன்று முறை கூறி விட்டு,

அல்லாஹுஃம்ம அன்த்தஸ் ஸலாம் வமின்கஸ் ஸலாம் தபாரக்த யாதல் ஜலாலி வல்இக்கராம் என்றும் கூறு வார்கள். (முஸ்லிம் 592)

أَسْتَغْفِرُ الله أَسْتَغْفِرُ الله أَسْتَغْفِرُ الله اللَّهُمَّ أَنْتَ

السَّلَامُ وَمِنْكَ السَّلَامُ تَبَارَكْتَ يَا ذَا الْجَلَالِ وَالْإِكْرَامِ

(பொருள்: அல்லாஹ்விடம் நான் பாவ மன்னிப்புத் தேடுகிறேன். இறைவா! நீ சாந்தி அளிப்பவன்! உன்னிடமிருந்தே சாந்தி ஏற்படுகிறது. மாண்பும் கண்ணியமும் உடையவனே! நீயே அருள்வளமுடையவன்.)

27. நபி(ஸல்) அவர்கள் தொழுது முடித்ததும் பின்வருமாறு கூறுவார்கள். லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீக் கலஹு லஹுல் முல்கு வலஹுல் ஹம்து வஹுவ அலா குல்லி ஷையின் கதீர். அல்லாஹும்ம லா மானிஅ லிமா அஃதய்த்த வலா முஃதிய லிமா மனஃத வலா யன்ஃபவுதல் ஜத்தி மின்கல் ஜத். (புகாரி 6330)

لَا إِلَهَ إِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ
وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ اللَّهُمَّ لَا مَانِعَ لِمَا أَعْطَيْتَ وَلَا

مُعْطِيَ لِمَا مَنَعْتَ وَلَا يَنْفَعُ ذَا الْجَدِّ مِنْكَ الْجَدُّ

(பொருள்: வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு யாதொரு இணையுமில்லை. ஆட்சியதிகாரம் அவனுக்குரியதே. புகழனைத்தும் அவனுக்கே. அவன் எல்லாப் பொருட்களின் மீதும் ஆற்றலுள்ளவன். இறைவா! நீ கொடுப்பதைத் தடுப்பவர் யருமில்லை. நீ தடுத்ததை கொடுப்பவர் யாருமில்லை. செல்வமுடையவர் எவரையும் அவரது செல்வம் உனது தண்டனையிலிருந்து காத்திட முடியாது.)

28. ஒவ்வொரு தொழுகைக்குப் பின்பு குல் ஹுவல்லாஹு அஹத், குல் அவூது பிரப்பில் ஃபலக், குல் அவூது பிரபிப்பின் நாஸ் ஆகிய சூராக்களை ஓதும்படி நபி (ஸல்) தனக்குக் கட்டளையிட்டதாக

உக்பா பின் ஆமிர்(ரலி) அறிவிக்கிறார். (அபூதாவூது 1523)

29. முஆதே! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உம்மை நான் நேசிக் கிறேன்! நீர் ஒவ்வொரு தொழுகைக்குப் பின்பும் “அல்லாஹும்ம அஇன்னீ அலா திக்ரிக வஷுக்ரிக வஹுஸ்னி இபாததிக்” என்று கூறுவதை விட்டுவிடாதே! என நபி (ஸல்)கூறினார்கள். அறிவிப்பவர்: மூஆத் (ரலி), நூல்: அபூதாவூத் (1522)

اللَّهُمَّ أَعِنِّي عَلَى ذِكْرِكَ وَشُكْرِكَ وَحُسْنِ عِبَادَتِكَ

(பொருள்: யா அல்லாஹ்! உன்னைத் துதிக்கவும் உனக்கு நன்றி செலுத்தவும் உன்னை அழகுற வணங்கவும் எனக்கு உதவி செய்வாயாக!)

**கழிவறையில் நுழையும்போது**

30. அல்லாஹும்ம இன்னீ அவூதுபிக மினல் குபுஸி வல் கபாயிஸ்

اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ الْخُبُثِ وَالْخَبَائِثِ

(பொருள்: இறைவா! ஆண், பெண் ஷைத்தான்களை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகின்றேன். (புகாரி 142)

**கழிவறையிலிருந்து வெளியேறும்போது**

31. மலஜலம் கழித்துவிட்டு வெளியே வந்து "கு.ஃப்ரானக்" غُفْرَانَكَ எனக் கூற வேண்டும். (அபூதாவூது 30)

(பொருள்: இறைவா! உன்னிடம் பாவமன்னிப்பு கோருகிறேன்.)

**உளூ செய்யு முன்**

32. பிஸ்மில்லாஹ் (நஸயீ 77)

**உளூ செய்து முடித்ததும்**

33. அஷ்ஹது அன் லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீக் கலஹு வஅஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரஸூலுஹு (முஸ்லிம் 234)

أَشْهَدُ أَنْ لَا إِلَهَ إِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيكَ لَهُ

وَأَشْهَدُ أَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُولُهُ

(பொருள்: வணங்குவதற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை அவன் தனித்தவன். அவனுக்கு யாதொரு இணையுமில்லை. முஹம்மது நபி அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும் அவனது தூதரும் ஆவார்கள் என சாட்சி கூறுகிறேன்.)

**வீட்டிலிருந்து வெளியேறும்போது**

34. பிஸ்மில்லாஹி தவக்கல்து அலல் லாஹ் லாஹவ்ல வலா குவ்வத இல்லா பில்லாஹ் (திர்மிதி 3426)

بِسْمِ اللهِ تَوَكَّلْتُ عَلَى اللهِ لَا حَوْلَ وَلَا قُوَّةَ إِلَّا بِاللهِ

(பொருள்: அல்லாஹ்வின் பெயர் கூறி வெளியேறுகிறேன். அவனையே நான் முழுவதும் சார்ந்திருக்கிறேன். தீமையிலிருந்து விலகுதலும் நன்மையின் மீது ஆற்றல் பெறுதலும் அல்லாஹ்வின் உதவி கொண்டே தவிர இல்லை.)

**வீட்டில் நுழையும்போது**

35. அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக கைரல் மவ்லஜி வகைரல் மக்ரஜி பிஸ்மில்லாஹி வலஜ்னா வபிஸ்மில் லாஹி கரஜ்னா வஅலா ரப்பினா தவக் கல்னா. (அபூதாவூத் 5096)

اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ خَيْرَ الْمَوْلَجِ وَخَيْرَ الْمَخْرَجِ بِسْمِ اللهِ وَلَجْنَا وَبِسْمِ اللهِ خَرَجْنَا وَعَلَى اللهِ رَبِّنَا تَوَكَّلْنَا

(பொருள்: இறைவா! நல்ல முறையில் நுழைவதையும் நல்ல முறையில் வெளி யேறுவதையும் உன்னிடம் யாசிக்கிறேன். அல்லாஹ்வின் பெயரால் நுழைகிறோம். அல்லாஹ்வின் பெயரால் வெளியேறுகி றோம். மேலும் எங்கள் இரட்சகன் மீதே நாங்கள் முழுவதும் சார்ந்துள்ளோம்.)

**பள்ளியில் நுழையும்போது**

36. அவூது பில்லாஹில் அழீம் வபிவஜ் ஹிஹில் கரீம் வசுல்தானிஹில் கதீம் மினஷ்ஷைத்தானிர் ரஜீம் பிஸ்மில் லாஹி வஸ்ஸலாத்து வஸ்ஸலாமு அலா ரசூலில்லாஹி அல்லாஹும்ம ம.்.ப்தஹ்லீ அப்வாப ரஹ்மதிக.

أَعُوذُ بِاللهِ الْعَظِيمِ وَبِوَجْهِهِ الْكَرِيمِ وَسُلْطَانِهِ الْقَدِيمِ مِنْ الشَّيْطَانِ الرَّجِيمِ بِسْمِ اللهِ وَالصَّلاَةُ وَالسَّلاَمُ عَلَى رَسُولِ اللهِ اللَّهُمَّ افْتَحْ لِي أَبْوَابَ رَحْمَتِكَ

(பொருள்: மகத்துவமிக்க அல்லாஹ்வைக் கொண்டும், அவனது திருமுகத்தைக் கொண்டும், அவனது நிலையான மேலாதிக்கத்தைக் கொண்டும், விரட்டப் பட்ட ஷைத்தானை விட்டும் பாதுகாப்புத் தேடுகிறேன். அல்லாஹ்வின் பெயர் கொண்டு நுழைகிறேன். இறையருளும் சாந்தியும் இறைத்தூதர் மீது உண்டாவதாக. இறைவா! உன் அருள்வாயில்களை எனக்குத் திறந்திடுவாயாக!)

அல்லது اللَّهُمَّ افْتَحْ لِي أَبْوَابَ رَحْمَتِكَ

“அல்லாஹும்ம ம.்.ப்தஹ்லீ அப்வாப ரஹ்மதிக” (இறைவா! உன்னருள்வாயில்

களை எனக்குத் திறந்திடு.) என்று மட்டும் கூறலாம். (முஸ்லிம் 713)

**பள்ளியிலிருந்து வெளியேறும்போது**

37. பிஸ்மில்லாஹி வஸ்ஸலாத்து வஸ்ஸலாமு அலா ரஸூலில்லாஹி அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக மின் ஃபழ்லிக அல்லாஹும் மஃஸிம்னீ மினஷ் ஷைத்தானிர் ரஜீம்.

بِسْمِ اللهِ وَالصَّلاَةُ وَالسَّلاَمُ عَلَى رَسُولِ اللهِ

اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ مِنْ فَضْلِكَ اللَّهُمَّ اعْصِمْنِيْ

مِنْ الشَّيْطَانِ الرَّجِيمِ

(பொருள்: அல்லாஹ்வின் பெயரால் வெளியேறுகிறேன். இறையருளும் சாந்தியும் அல்லாஹ்வின் தூதர் மீது உண்டாவதாக. இறைவா! உன்னிடம் உன் அருட்

கொடையை வேண்டுகிறேன். இறைவா! விரட்டப்பட்ட ஷைத்தானை விட்டும் என்னை நீ பாதுகாப்பாயாக!)

அல்லது اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ مِنْ فَضْلِكَ

“அல்லாஹு'ம்ம இன்னீ அஸ்அலுக மின் ∴பழ்லிக” (இறைவா! உன்னிடம் உன் அருட்கொடையை யாசிக்கிறேன்.) என்று மட்டும் கூறலாம். (முஸ்லிம் 713)

**பாங்கு சப்தத்தைக் கேட்கும்போது**

38. பாங்கு சொல்பவர் சொல்வதையே திருப்பிச் சொல்ல வேண்டும். ஆனால் ஹய்ய அலஸ்ஸலாஹ், ஹய்ய அலல் ∴பலாஹ் என்று கூறும்போது “லாஹவ்ல வலா குவ்வத இல்லா பில்லாஹ்” என்று கூற வேண்டும். பிறகு நபி (ஸல்) மீது ஸலவாத்து சொல்ல வேண்டும். பின்பு,

அல்லாஹுªம்ம ரப்ப ஹாதிஹித் த.ஃ.வதித் தாம்மத்தி, வஸ்ஸலாத்தில் காயிமத்தி, ஆத்தி முஹம்மதனில் வஸீலத வல்.ஃ.பழீலத வப்அஸ்ஹுª மகாமம் மஹ்முதனில்லதீ வஅத்தஹுª, இன்னக லா துக்லி.ஃ.புல் மீஆத்

என்று கூற வேண்டும். இப்படி ஒருவர் கூறினால் அவருக்கு மறுமையில் எனது பரிந்துரை உறுதியாகிவிட்டது என நபி (ஸல்)கூறினார்கள். (புகாரி 614) “இன்னக லா துக்லி.ஃ.புல் மீஆத்” என்ற வாசகம் பைஹகீயில் உள்ளது.

(பொருள்: இறைவா! இந்தப் பரிபூரண மான அழைப்புக்கும் நிலையான தொழு கைக்கும் உரிய இரட்சகனே! முஹம்மது நபிக்கு வஸீலா எனும் உயர் அந்தஸ் தையும் சிறப்பையும் வழங்குவாயாக! மேலும் அவர்களுக்கு நீ வாக்களித்த

‘மகாம் மஹ்மூத்’ எனும் புகழுக் குரிய இடத்தில் அவர்களை எழுப்புவாயாக. நிச்சயமாக நீ வாக்கு மீறுவ தில்லை.)

**தூங்கும் போது**

39. நீங்கள் படுக்கைக்குச் சென்றால் ஆயத்துல் குர்ஸியை ஓதிக் கொள் ளுங்கள். அவ்வாறு செய்தால் அல்லாஹ் விடமிருந்து உங்களுக்குத் தொடர்ந்து ஒரு பாதுகாவலர் இருந்து கொண்டே யிருக்கிறார். மறுநாள் காலைவரை உங்களை ஷைத்தான் நெருங்கவே மாட்டான் என நபி(ஸல்) கூறினார்கள். (புகாரி 5010) ஆயத்துல் குர்ஸி வருமாறு:

அல்லாஹு லாஇலாஹ இல்லாஹு வல் ஹய்யுல் கய்யூம், லா த.்.குதுஹு ஸினதுன் வலாநவ்முன் லஹு மா.்.பிஸ் ஸமாவாத்தி வமா.்.பில் அர்ழி, மன்தல் லதீ யஷ்.்.பவு இன்தஹு இல்லா பிஇத்

னிஹி, ய.்.லமு மாபய்ன அய்தீஹிம் வமா கல்.்.பஹும் வலா யுஹீதூன பிஷையின் மின் இல்மிஹி, இல்லா பிமா ஷாஅ, வஸிஅ குர்ஸிய்யு ஹுஸ் ஸமாவாத்தி வல்அர்ழ, வலா யவூதுஹு ஹி.்.ப்ழு ஹுமா வஹுவல் அலிய்யுல் அழீம்.

﴿اللهُ لَا إِلَهَ إِلَّا هُوَ الحَيُّ القَيُّومُ لَا تَأْخُذُهُ سِنَةٌ وَلَا نَوْمٌ لَهُ مَا فِي السَّمَاوَاتِ وَمَا فِي الأَرْضِ مَنْ ذَا الَّذِي يَشْفَعُ عِنْدَهُ إِلَّا بِإِذْنِهِ يَعْلَمُ مَا بَيْنَ أَيْدِيهِمْ وَمَا خَلْفَهُمْ وَلَا يُحِيطُونَ بِشَيْءٍ مِنْ عِلْمِهِ إِلَّا بِمَا شَاءَ وَسِعَ كُرْسِيُّهُ السَّمَاوَاتِ وَالأَرْضَ وَلَا يَئُودُهُ حِفْظُهُمَا وَهُوَ العَلِيُّ العَظِيمُ﴾ [البقرة:٢٥٥]

(பொருள்: அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாரும் இல்லை. அவன் என்றென்றும் உயிருடன்

இருப்பவன். அவனுக்குச் சிறு உறக் கமோ அழ்ந்த உறக்கமோ ஏற்படாது. வானங்களில் உள்ளவையும் பூமியில் உள்ளவையும் அவனுக்கே உரியன. அவன் அனுமதித்தால் தவிர அவனிடம் யார் தான் பரிந்து பேச முடியும்? அவர் களுக்கு முன்னேயும் பின்னேயும் உள்ளதை அவன் அறிகிறான். அவன் அறிந்திருப்பவற்றில் எதையும் அவர் களால் அறிய முடியாது. அவன் நாடிய தைத் தவிர. அவனது ஆசனம் வானங் களையும் பூமியையும் உள்ளடக்கும். அவ்விரண்டையும் காப்பது அவனுக்குச் சிரமமானதன்று. அவன் உயர்ந்தவன்! மகத்துவமிக்கவன்! 2:255)

40. “நபி(ஸல்) அவர்கள், ஒவ்வொரு இரவிலும் படுக்கைக்குச் செல்லும்போது தம் இரு உள்ளங்கைகளையும் சேர்த்து

வைத்துக் கொண்டு அதில் ஊதி, குல் ஹுவல்லாஹு அஹத், குல் அவூது பிரப் பில் ∴பலக், குல் அவூது பிரப்பின்னாஸ் ஆகிய அத்தியாயங்களை ஓதுவார்கள். பின்பு தமது உடலில் எங்கெல்லாம் முடியுமோ அங்கெல்லாம் தடவிக் கொள் வார்கள். அதவாவது முதலில் தலையில் பிறகு முகம் பிறகு தமது உடலின் முற் பகுதியில் என இயன்ற இடங்களில் தடவிக் கொள்வார்கள். இவ்வாறு மூன்று முறை செய்வார்கள்" என ஆயிஷா(ரலி) அறிவிக்கிறார்கள். (புகாரி 5018)

41. "உங்களில் ஒருவர் படுக்கைக்குச் சென்றால் அவர் தமது ஆடையின் ஒரு ஓரத்தால் தமது படுக்கையைத் தட்டிக் கொள்ளட்டும் ஏனெனில் அதில் என்ன சென்றது என்பது அவருக்குத் தெரியாது.

பின்பு, பிஸ்மிக ரப்பி வள.்.த்து ஜன்பீ வபிக அர்.்.பவுஹு இன் அம்ஸக்த ந.்.ப்ஸீ .்.பர்ஹம்ஹா வஇன் அர்ஸல் தஹா .்.பஹ்.்.பழ்ஹா பிமா தஹ்.்.பழு பிஹி இபாதகஸ் ஸாலிஹீன் என்று கூறட்டும்” என நபி (ஸல்) கூறினார்கள். (புகாரி 6320)

بِاسْمِكَ رَبِّ وَضَعْتُ جَنْبِي وَبِكَ أَرْفَعُهُ إِنْ أَمْسَكْتَ نَفْسِي فَارْحَمْهَا وَإِنْ أَرْسَلْتَهَا فَاحْفَظْهَا بِمَا تَحْفَظُ بِهِ عِبَادَكَ الصَّالِحِينَ

(பொருள்: இறைவா! உன் பெயரைக் கொண்டே எனது விலாப்புறத்தைக் கிடத்தினேன். மேலும் உன் உதவி கொண்டே அதை உயர்த்துவேன். என் உயிரை நீ தடுத்துக் கொண்டால் அதற்கு நீ அருள் புரிந்திடு.அதை நீ விட்டுவிட்டால் அதைப்

பாதுகாத்திடு. உனது நல்லடியார்களை எதனைக் கொண்டு நீ பாதுகாப்பாயோ அதனைக் கொண்டு!)

42. தமக்கு ஒரு பணியாள் தருமாறு நபி(ஸல்) அவர்களிடம் ஃபாத்திமா(ரலி) கேட்டபோது “நீங்கள் கேட்டதை விடச் சிறந்ததை உங்களுக்குச் சொல்லட்டுமா? நீங்கள் படுக்கைக்குச் சென்றால் சுப்ஹா னல்லாஹ் 33 தடவை, அல்ஹம்துலில் லாஹ் 33 தடவை, அல்லாஹு அக்பர் 34 தடவை கூறுங்கள். அது உங்களுக்கு பணியாளை விடச் சிறந்தது” என்று நபி (ஸல்) கூறினார்கள். (புகாரி 5361)

43. நீ படுக்கைக்குச் சென்றால் தொழு கைக்குச் செய்வது போல உளூ செய்து கொள். பின்பு வலதுபுறமாக ஒருக்களித் துப்படுத்துக் கொண்டு “அல்லாஹும்ம அஸ்லம்து நஃப்ஸீ இலைக்க வவஜ்

ஜஹ்த்து வஜ்ஹீ இலைக்க வ.்.பவ்வழ்து அம்ரீ இலைக்க வஅல்ஜ.்.து ழஹ்ரீ இலைக்க ர.்.க்பதன் வரஹ்பதன் இலைக்க, லா மல்ஜஅ வலா மன்ஜா மின்க இல்லா இலைக்க ஆமன்து பிகிதா பிகல்லதீ அன்ஸல்த்த வநபிய்யி கல்லதீ அர்ஸல்த்த" என்று கூறு. அன்றிரவே நீ இறந்து விட்டால் இஸ்லாத்தின் இயல்பு நிலை மீதே இறந்தவனாவாய். அன்று காலையில் நீ எழுந்துவிட்டால் நற்கூலி யுடன் எழுவாய். இவ்வார்தைகள் உன் பேச்சின் இறுதியாக இருக்கட்டும். (அதன் பின் பேசாமல் உறங்கிவிடு) என நபி (ஸல்) அவர்கள் தம்மிடம் கூறியதாக பர்ரா பின் ஆஸிப்(ரலி) அறிவிக்கிறார்கள். (பார்க்க: புகாரி 6311, 7488)

اللَّهُمَّ أَسْلَمْتُ نَفْسِي إِلَيْكَ وَوَجَّهْتُ وَجْهِي إِلَيْكَ وَفَوَّضْتُ أَمْرِي إِلَيْكَ وَأَلْجَأْتُ ظَهْرِي إِلَيْكَ رَغْبَةً وَرَهْبَةً إِلَيْكَ لَا مَلْجَأَ وَلَا مَنْجَا مِنْكَ إِلَّا إِلَيْكَ آمَنْتُ بِكِتَابِكَ الَّذِي أَنْزَلْتَ وَبِنَبِيِّكَ الَّذِي أَرْسَلْتَ

(பொருள்: இறைவா! என் மனதை உனக்குப் பணியுமாறு செய்து விட்டேன். என் முகத்தை உன் பக்கம் திருப்பி விட்டேன். என் காரியங்கள உன்னிடம் ஒப்படைத்துவிட்டேன். என் முதுகை உன் பக்கம் சாய்த்து விட்டேன். உன் பால் ஆர்வம் கொண்டும் அச்சம் கொண்டும்! உன்னையன்றி எனக்கு ஒதுங்குமிடமோ தப்பிக்குமிடமோ வேறில்லை. நீ இறக்கி யருளிய உனது வேத்தின் மீதும் நீ அனுப்பிய உன் நபியின் மீதும் நான் விசுவாசம் கொண்டேன்.)

**கனவுகள்**

44. “நல்ல கனவுகள் அல்லாஹ்வின் புறத்திலிருந்தும் கெட்ட கனவுகள் ஷைத் தானின் புறத்திலிருந்தும் ஏற்படுகின்றன. தான் வெறுக்கின்ற கனவை யாரேனும் கண்டால் இடது புறம் மூன்று முறை துப்பி விட்டு ஷைத்தானை விட்டும் அல்லாஹ் விடம் பாதுகாப்புத் தேடட்டும். (மற்றொரு அறிவிப்பில், மேலும் அவர் படுத்திருந்த நிலையிலிருந்து திரும்பி படுத்துக்கொள் ளட்டும்.) அதனால் அவருக்கு எந்த தீங்கும் ஏற்படாது. அதை அவர் யாரிடமும் கூற வேண்டாம். நல்ல கனவு கண்டால் அவர் சந்தோஷப்படட்டும். அதை தனக்கு பிரியமானவரிடம் தவிர வேறு யாரிடமும் கூற வேண்டாம்” என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூகதாதா (ரலி) நூல்: முஸ்லிம் 2261, 2262

**சாப்பிடும் முன், சாப்பிட்ட பின்**

45. "நீங்கள் உண்ணும்போது பிஸ்மில் லாஹ் சொல்லி உண்ணுங்கள். ஆரம் பத்தில் பிஸ்மில்லாஹ் சொல்ல மறந்து விட்டால் (நினைவு வந்ததும்) பிஸ்மில் லாஹி அவ்வலஹு வஆகிரஹு بِسْمِ اللهِ أَوَّلَهُ وَآخِرَهُ என்று கூறுங்கள்" என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அறிவிப் பவர்: ஆயிஷா(ரலி), (அபூதாவூத் 3767)

(பொருள்: இதன் ஆரம்பத்திலும் இறுதி யிலும் அல்லாஹ்வின் பெயரால்...)

46. "யாரேனும் உணவருந்தி விட்டு "அல்ஹம்து லில்லா ஹில்லதீ அத்அமனீ ஹாதா வரஸகனீஹி மின் கைரி ஹவ் லின் மின்னீ வலா குவ்வஹ்" என்று கூறி னால் அவரது முன்பாவங்கள் மன்னிக் கப்படுகின்றன." நபிமொழி (திர்மிதி 3458)

الْحَمْدُ للهِ الَّذِي أَطْعَمَنِي هَذَا وَرَزَقَنِيهِ
مِنْ غَيْرِ حَوْلٍ مِنِّي وَلَا قُوَّةٍ

(பொருள்: புகழனைத்தும் அல்லாஹ்வுக்கே! அவனே இந்த உணவை எனக்கு வழங்கினான். என்னிடமிருந்து எவ்வித முயற்சியும் சக்தியுமின்றியே இதனை எனக்கு அருளினான்.)

நபி(ஸல்) அவர்கள் (சாப்பிட்டு முடித்ததும்) உணவுத் தட்டு உயர்த்தப்பட்டு விட்டால் “அல்ஹம்து லில்லாஹி கஸீரன் தய்யிபன் முபாரகன் ஃபீஹி கைர மக்ஃபிய்யின் வலா முவத்தயின் வலா முஸ்தஃக்னன் அன்ஹு ரப்பனா” என்று கூறுவார்கள். அறிவிப்பவர்: அபு உமாமா (ரலி), நூல்: புகாரி 5458

الْحَمْدُ للهِ كَثِيرًا طَيِّبًا مُبَارَكًا فِيهِ غَيْرَ مَكْفِيٍّ

وَلَا مُوَدَّعٍ وَلَا مُسْتَغْنًى عَنْهُ رَبَّنَا

(பொருள்: எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அருட்பேரும் அழகும் மிக்க அதிகமான புகழ்! போதுமெனக் கருதப் படாத புகழ், விடப்படாத புகழ், மேலும் அதை விட்டும் தேவையற்றிருக்க முடியாத புகழ்! எங்கள் இரட்சகனே!)

**நோன்பு துறந்ததும்**

47. தஹபள்ளமவு வப்தல்லதில் உரூக்கு வஸபதல் அஜ்ரு இன்ஷா அல்லாஹ். (அபூதாவூது 2357)

ذَهَبَ الظَّمَأُ وَابْتَلَّتْ الْعُرُوقُ وَثَبَتَ الْأَجْرُ إِنْ شَاءَ اللهُ

(பொருள்: தாகம் தீர்ந்தது. நரம்புகள் நனைந்தன. அல்லாஹ் நாடினால் கூலி கிடைத்துவிடும்.)

**தும்மியதும்**

48. உங்களில் ஒருவர் தும்மினால் அல்ஹம்து லில்லாஹ் الْحَمْــدُ لله (புகழ் அனைத்தும் அல்லாஹ்வுக்கே!) என்று கூறட்டும். (இதைச் செவியேற்ற) அவரது சகோதரர் யர்ஹமுகல்லாஹ் يَرْحَمُكَ الله (அல்லாஹ் உனக்கருள் புரிவானாக!) என்று கூறவும். இவர் அவருக்காக யர்ஹமுகல்லாஹ் என்று கூறினால் தும்மியவர் யஹ்தீக்குமுல்லாஹு வயுஸ்லிஹு பாலகும் يَهْدِيكُمُ الله وَيُصْلِحُ بَالَكُمْ என்று கூறட்டும். (அல்லாஹ் உமக்கு நேர்வழி காட்டி உமது நிலைகளைச் சீர்படுத்தட்டும்.) நபிமொழி (புகாரி 6224)

**சேவல் கூவும் போது**

49. அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக மின் ஃபழ்லிக اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ مِنْ فَضْلِكَ

(பொருள்: இறைவா! உன் அருளை வேண்டுகிறேன்.)

**கழுதை கத்தும்போது**

அவூதுபில்லாஹி மினஷ் ஷைத்தானிர்ரஜீம்” أَعُوْذُ بِاللهِ مِنْ الشَّيْطَانِ الرَّجِيمِ

(பொருள்: விரட்டப்பட்ட ஷைத்தானை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுகிறேன்.)

“சேவல் கூவுவதை நீங்கள் செவியேற்றால் அல்லாஹ்விடம் அவனது அருளை வேண்டுங்கள். ஏனெனில் அது மலக்கைப் பார்த்துவிட்டது. கழுதை கத்துவதைக் கேட்டால் ஷைத்தானிடமிருந்து அல்லாஹுவிடம் பாதுகாப்புத் தேடுங்கள். ஏனெனில் அது ஷைத்தானைப் பார்த்து விட்டது.” நபிமொழி (புகாரி 3303)

**மழையை வேண்டும் போது**

50. அல்லாஹு"ம் மஸ்கினா (அல்லது) அல்லாஹு"ம்ம அகிஸ்னா (மூன்று முறை)

اللَّهُمَّ اسْقِنَا (அல்லது) اللَّهُمَّ أَغِثْنَا

(பொருள்: இறைவா! எங்களுக்கு மழை பொழிவிப்பாயாக!) (புகாரி 1013, 1014)

**மழை பொழியும் போது**

51. அல்லாஹு"ம்ம ஸய்யிபன் நா.ஃ.பிஆ (புகாரி 1032) اللَّهُمَّ صَيِّبًا نَافِعًا

(பொருள்: இறைவா! (இம்மழையை) பயனுள்ளதாக ஆக்கு!)

**மழை பொழிந்த பின்பு**

52. முதிர்னா பி .ஃ.பழ்லில்லாஹி வரஹ் மதிஹி (புகாரி 846, முஸ்லிம் 71)

مُطِرْنَا بِفَضْلِ اللهِ وَرَحْمَتِهِ

(பொருள்: அல்லாஹ்வின் அருளாலும் அவனது கருணையாலும் மழை பொழி விக்கப்பட்டோம்.)

**மழை கடுமையானால்**

53. அல்லாஹும்ம ஹவாலைனா வலா அலைனா அல்லாஹும்ம அலல் ஆகாமி வழ்ழிராபி வபுதூனில் அவ்தியதி வமனாபிதிஷ் ஷஜர். (புகாரி 1014)

اللَّهُمَّ حَوَالَيْنَا وَلَا عَلَيْنَا اللَّهُمَّ عَلَى الْآكَامِ وَالظِّرَابِ وَبُطُونِ الْأَوْدِيَةِ وَمَنَابِتِ الشَّجَرِ

(பொருள்: இறைவா! எங்கள் சுற்றுப் புறங்களில் மழை பொழியச் செய். எங்கள் மீதல்ல! இறைவா! மலைகள், குன்றுகள் ஓடைகளின் உட்புரங்கள், தாவரங்கள் முளைக்கும் இடங்கள் ஆகியவற்றில் மழை பொழிந்திடச் செய்வாயாக!)

**மணமக்களை வாழ்த்தும்போது**

54. பாரகல்லாஹு லக வபாரக அலைக வஜமஅ பைனகுமா ஃபீ கைர் (அபூதாவூத் 2130, திர்மிதி 1091)

بَارَكَ اللهُ لَكَ وَبَارَكَ عَلَيْكَ وَجَمَعَ بَيْنَكُمَا فِي خَيْرٍ

(பொருள்: அல்லாஹ் உமக்கு அருட் பாக்கியங்களை நல்கட்டும்! மேலும் உம் மீது அபிவிருத்தியைப் பொழியட்டும்! உங்களிள் இருவரையும் நலனில் ஒன்றி ணைத்து வைக்கட்டும்!)

**உடலுறவு கொள்ளும்போது**

55. பிஸ்மில்லாஹி அல்லாஹும்ம ஜன்னிப்னஷ் ஷைத்தான வஜன்னிபிஷ் ஷைத்தன மா ரஸக்தனா. (புகாரி 141)

اللَّهُمَّ جَنِّبْنَا الشَّيْطَانَ وَجَنِّبْ الشَّيْطَانَ مَا رَزَقْتَنَا

(அல்லாஹ்வின் பெயரால் துவங்குகி றேன். இறைவா! எங்களையும் நீ எங்க

ளுக்கு வழங்கிய குழந்தையையும் ஷைத்தானிடமிருந்து பாதுகாப்பாயாக.)

**சபை கலையும்போது**

56. சுப்ஹானகல்லாஹும்ம வபிஹம்திக அஷ்ஹது அன்லாயிலாஹ இல்லா அன்த அஸ்தக்.ஃபிருக வஅதூபு இலைக். (திர்மிதி 3433, அபூதாவூது 4859)

سُبْحَانَكَ اللَّهُمَّ وَبِحَمْدِكَ أَشْهَدُ أَنْ لَا إِلَهَ إِلَّا أَنْتَ
أَسْتَغْفِرُكَ وَأَتُوبُ إِلَيْكَ

(பொருள்: இறைவா! உன்னைப் புகழ்வதுடன் துதிக்கவும் செய்கிறேன். வணக்கத்திற்குரியவன் உன்னைத் தவிர வேறு யாருமில்லை என்று நான் சாட்சி கூறுகிறேன். மேலும் நான் உன்னிடம் பாவ மன்னிப்புக் கோருகின்றேன். மேலும் உன் பக்கமே மீளுகிறேன்.)

**வாகனத்தில் போகும்போது**

57. வாகனத்தில் ஏறும்போது “பிஸ்மில் லாஹ்” என்று சொல்லி ஏற வேண்டும். ஏறி அமர்ந்ததும் “அல்ஹம்து லில்லாஹ்” என்று சொல்ல வேண்டும். அதன் பிறகு “சுப்ஹானல்லதீ ஸக்கர லனா ஹாதா வமா குன்னா லஹு முக்ரினீன வஇன்னா இலா ரப்பினா லமுன்கலிபூன்” என்று கூறி அல்ஹம்து லில்லாஹ் மூன்று தடவை, அல்லாஹு அக்பர் மூன்று தடவை பிறகு சுப்ஹானக இன்னீ ழலம்து ந.ஃ.ப்ஸீ, .ஃ.பக்.ஃ.பிர்லீ .ஃ.பஇன்னஹு லா யக்.ஃ.பிருத் தூனூப இல்லா அன்த்த என்று கூற வேண்டும். (திர்மிதி 3446, அபூதாவூது 2602)

بِسْمِ اللهِ ، الْحَمْدُ للهِ ، سُبْحَانَ الَّذِي سَخَّرَ لَنَا هَذَا
وَمَا كُنَّا لَهُ مُقْرِنِينَ وَإِنَّا إِلَى رَبِّنَا لَمُنْقَلِبُونَ، الْحَمْدُ للهِ
الْحَمْدُ للهِ الْحَمْدُ للهِ ، اللهُ أَكْبَرُ اللهُ أَكْبَرُ اللهُ أَكْبَرُ ،

سُبْحَانَكَ إِنِّي ظَلَمْتُ نَفْسِي فَاغْفِرْ لِي فَإِنَّهُ لَا يَغْفِرُ الذُّنُوبَ إِلَّا أَنْتَ

(பொருள்: அல்லாஹ்வின் பெயரால் பயணமாகிறேன். எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே. அவனே இந்த வாகனத்தை நமக்கு வசப்படுத்திக் கொடுத்தான். உண்மையில் அதற்கான சக்தியை நாம் பெற்றிருக்கவில்லை. திண்ணமாக நாம் நம் இரட்சகன் பக்கமே திரும்பிச் செல்பவர்களாவோம். எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே. அல்லாஹ் மிகப் பெரியவன்! நீ தூயவன்! நான் என் ஆத்மாவுக்கு அநீதி இழைத்துவிட்டேன். நீ என்னை மன்னித்தருள்வாயாக! ஏனெனில் பாவங்களை மன்னிப்பவர் உன்னைத் தவிர வேறு யாருமில்லை.)

**பயணம் செய்யும் போது**

58. நபி(ஸல்)அவர்கள் பயணம் செய் வதற்காக வாகனத்தில் ஏறி அமர்ந்ததும் அல்லாஹு அக்பர் என மூன்று முறை கூறுவார்கள். பின்பு, “ஸுப்ஹானல்லதீ ஸக்கர லனா ஹாதா வமாகுன்னா லஹு முக்ரினீன வஇன்னா இலா ரப்பினா லமுன் கலிபூன், அல்லாஹும்ம இன்னா நஸ் அலுக ஃபீ ஸ.ஃபரினா ஹாதா அல்பிர்ர வத்தக்வா, வமினல் அமலி மா தர்ழா, அல்லாஹும்ம ஹவ்வின் அலைனா ஸ.ஃபரனா ஹாதா வத்வி அன்னா பு.ஃதா, அல்லாஹும்ம அன்தஸ் ஸாஹிபு பிஸ் ஸ.ஃபர், வல் கலீ.ஃபது ஃபில் அஹ்ல், அல்லாஹும்ம இன்னீ அவூது பிக மின் வ.ஃஸாயிஸ் ஸ.ஃபர் வகஆபதில் மன்ழர், வஸுயில் முன்கலபி ஃபில் மாலி வல் அஹ்ல்” என்று ஓதுவார்கள். பயணத்தை

முடித்துவிட்டு ஊர் திரும்பும்போது மேற்கூறியவற்றுடன் “ஆயிபூன தாயிபூன ஆபிதூன லிரப்பினா ஹாமிதூன் என்பதையும் சேர்த்து ஓதுவார்கள். (முஸ்லிம் 1342)

سُبْحَانَ الَّذِي سَخَّرَ لَنَا هَذَا وَمَا كُنَّا لَهُ مُقْرِنِينَ وَإِنَّا إِلَى رَبِّنَا لَمُنْقَلِبُونَ اللَّهُمَّ إِنَّا نَسْأَلُكَ فِي سَفَرِنَا هَذَا الْبِرَّ وَالتَّقْوَى وَمِنْ الْعَمَلِ مَا تَرْضَى اللَّهُمَّ هَوِّنْ عَلَيْنَا سَفَرَنَا هَذَا وَاطْوِ عَنَّا بُعْدَهُ اللَّهُمَّ أَنْتَ الصَّاحِبُ فِي السَّفَرِ وَالْخَلِيفَةُ فِي الْأَهْلِ اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ وَعْثَاءِ السَّفَرِ وَكَآبَةِ الْمَنْظَرِ وَسُوءِ الْمُنْقَلَبِ فِي الْمَالِ وَالْأَهْلِ. (آيِبُونَ تَائِبُونَ عَابِدُونَ لِرَبِّنَا حَامِدُونَ)

(பொருள்: எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே. அவனே இந்த வாகனத்தை

நமக்கு வசப்படுத்திக் கொடுத்தான். உண்மையில் அதற்கான சக்தியை நாம் பெற்றிருக்கவில்லை. திண்ணமாக நம் இரட்சகன் பக்கமே நாம் திரும்பிச் செல்ப வர்களாவோம். இறைவா! இப்பயணத்தில் நன்மையையும், இறையச்சத்தையும், உனக்குத் திருப்தியான அமல்களைச் செய்யும் பாக்கியத்தையும் உன்னிடம் வேண்டுகிறோம். இறைவா! இந்தப் பயணத்தை எங்களுக்கு எளிதாக்கு வாயாக! இதன் தூரத்தை எங்களை விட்டு நீ சுருட்டிவிடுவாயாக! இறைவா! நீயே பயணத்தின் தோழன். குடும்பத் தாரின் பிரதிநிதி. இறைவா! பயணத்தின் சிரமம், கவலையான தோற்றம், பொரு ளிலும் குடும்பத்திலும் நட்டத்தோடு திரும்பி வருவதல் ஆகியவற்றை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.)

(திரும்பி வருகிறோம், மன்னிப்புக் கோருகிறோம், வழிபாடு செய்பவர்களாய், எங்கள் இறைவனைப் புகழ்பவர்களாய் இருக்கிறோம்.)

**கடன் தொல்லை நீங்க**

59. அல்லாஹும்ம மக்ஃபினீ பிஹலா லிக அன் ஹராமிக வஅஃக்னினீ பிஃபழ் லிக அம்மன் ஸிவாக் (திர்மிதி 3563)

اللَّهُمَّ اكْفِنِي بِحَلَالِكَ عَنْ حَرَامِكَ وَأَغْنِنِي

بِفَضْلِكَ عَمَّنْ سِوَاكَ

(பொருள்: இறைவா! நீ விலக்கியதை விட்டும் நீ ஆகுமாக்கியதைக் கொண்டு எனக்குப் போதுமாக்குவாயாக. மேலும் உனது அருளைக் கொண்டு உன்னைத் தவிர உள்ள அனைத்தையும் விட்டும் என்னைத் தேவையற்றவனாக ஆக்கு.)

60. கவலையும் கடன் தொல்லையும் வாட்டிய அபுஉமாமா(ரலி) அவர்களுக்கு அவை நீங்க காலையிலும் மாலையிலும் பின்வரும் துஆவை ஓதிவரும் படி நபி (ஸல்)அவர்கள் கற்றுக் கொடுத்தார்கள். அதன் படி அவர் அந்த துஆவை ஓதி வந்ததும் அல்லாஹ் அவரது கவலையை நீக்கி, கடனைத் தீர்த்து வைத்தான். (அபூதாவூது 1555)

அந்த துஆ வருமாறு: அல்லாஹும்ம இன்னீ அவூது பிக மினல் ஹம்மி வல் ஹஸன். வஅவூது பிக மினல் அஜ்ஸி வல்கஸல். வஅவூது பிக மினல் ஜுபுனி வல்புக்ல். வஅவூது பிக மின் கலபதித் தைனி வகஹ்ரிர் ரிஜால்.

اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ الْهَمِّ وَالْحَزَنِ وَ أَعُوذُ بِكَ مِنَ الْعَجْزِ وَالْكَسَلِ وَ أَعُوذُ بِكَ مِنَ الْجُبْنِ وَالْبُخْلِ

وَ أَعُوذُ بِكَ مِنْ غَلَبَةِ الدَّيْنِ و قَهْرِالرِّجَالِ

(பொருள்: இறைவா! கவலை, துயரம் இயலாமை, சோம்பல், கோழைத்தனம், கஞ்சத்தனம், கடன் பெருக்கம், மனிதர் களின் அடக்குமுறையை ஆகியவற்றை விட்டும் உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகிறேன்.)

இதே துஆ புகாரி (6363) யில் ஒரு சில மாற்றத்துடன் வந்துள்ளது. நபி(ஸல்) இதனை அதிகமதிகம் ஓதுவார்கள் என அனஸ் (ரலி) அறிவிக்கிறார்கள். அந்த துஆ வருமாறு:

அல்லாஹு‌ம்ம இன்னீ அவஊது பிக மினல் ஹம்மி வல் ஹஸன். வல் அஜ்ஸி வல்கஸல். வல்புக்லி வல் ஜு‌புன். வளலயித் தைனி வகஹ்ரிர் ரிஜால்.

اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ الْهَمِّ وَالْحَزَنِ وَالْعَجْزِ وَالْكَسَلِ وَالْبُخْلِ وَالْجُبْنِ وَضَلَعِ الدَّيْنِ وَغَلَبَةِ الرِّجَالِ

மேற்கூறப்பட்ட பொருள்தான் இதற்கும்.

**ஆடை அணியும்போது**

61. அல்ஹம்து லில்லாஹில்லதீ கஸானீ ஹாதஸ் ஸவ்ப வரஸகனீஹி மின் கைய்ரி ஹவ்லிம் மின்னீ வலா குவ்வா (அபூதாவூத் 4023)

الْحَمْدُ لِلَّهِ الَّذِي كَسَانِي هَذَا الثَّوْبَ وَرَزَقَنِيهِ مِنْ غَيْرِ حَوْلٍ مِنِّي وَلَا قُوَّةٍ

(பொருள்: எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே!அவனே எனக்கு இந்த ஆடையை அணிவித்தான். என்னிடமிருந்து எவ்வித முயற்சியும் சக்தியும் இன்றியே இதனை எனக்கு அருளினான்.)

**புத்தாடை அணியும்போது**

62. அல்லாஹு ம்ம லகல் ஹம்து அன்த கஸவ்தனீஹி அஸ்அலுக மின் கைரிஹி வகைரிமா சுனிஅ லஹு வஅவூதுபிக மின் ஷர்ரிஹி வஷர்ரிமா சுனிஅ லஹு (திர்மிதி 1767)

اللَّهُمَّ لَكَ الْحَمْدُ أَنْتَ كَسَوْتَنِيهِ أَسْأَلُكَ خَيْرَهُ وَخَيْرَ مَا صُنِعَ لَهُ وَأَعُوذُ بِكَ مِنْ شَرِّهِ وَشَرِّ مَا صُنِعَ لَهُ

(பொருள்: இறைவா! எல்லாப் புகழும் உனக்கே. நீயே எனக்கு இந்த ஆடையை அணிவித்தாய். இதன் நன்மையையும் இது எதற்காக உருவாக்கப்பட்டதோ அதன் நன்மையையும் உன்னிடம் கேட்கிறேன். மேலும் இதன் தீமையை விட்டும் இது எதற்காக தயார் செய்யப்பட்டதோ அதன் தீமையை விட்டும் உன்னிடம் பாதுகாப்பு தேடுகிறேன்.)

**எதிரிகளையும் ஆட்சியாளர்களையும் சந்திக்கும் போது**

63. நபி (ஸல்) அவர்கள் ஏதேனும் கூட்டத்தைப் பயந்தால் “அல்லாஹும்ம இன்னா நஜ்அலுக ஃபீ நுஹூரிஹிம் வநவூதுபிக மின் ஷுரூரிஹிம்” எனக் கூறுவார்கள். (அபூதாவூது 1537)

اللَّهُمَّ إِنَّا نَجْعَلُكَ فِي نُحُورِهِمْ وَنَعُوذُ بِكَ مِنْ شُرُورِهِمْ

(பொருள்: இறைவா! அவர்களுக்கு எதிரில் உன்னை ஆக்குகிறோம். அவர்களின் தீங்குகளை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறோம்.)

**நோய் நிவாரணத்திற்கு**

64. நபி(ஸல்) அவர்கள் தமது மனைவியரில் ஒருவருக்கு ஓதிப்பார்த்தார்கள். அவரைத் தமது வலது கையால் தடவி,

“அல்லாஹும்ம ரப்பன்னாஸ் அத்ஹிபில் ப.்.ஸ இஷ்.்.பிஹி வஅன்தஷ் ஷா.்.பி லா ஷி.்.பாஅ இல்லா ஷி.்.பாவுக ஷி.்.பா அன் லாயு.்.காதிரு ஸகமா” என்று கூறுவார்கள். (புகாரி 5743)

اللَّهُمَّ رَبَّ النَّاسِ أَذْهِبْ الْبَاسَ اشْفِهِ وَأَنْتَ الشَّافِي

لَا شِفَاءَ إِلَّا شِفَاؤُكَ شِفَاءً لَا يُغَادِرُ سَقَمًا

(பொருள்: இறைவா! மனிதர்களின் இரட்சகனே! இவரது நோயைப் போக்கி எந்த நோயையும் விட்டு வைக்காமல் நிவாரணமளிப்பாயாக. நீயே நிவரணம் அளிப்பவன்! உன் நிவாரணத்தைத் தவிர வேறெதுவும் நிவாரணமாக இருக்க முடியாது.)

**நோயாளிக்கு துஆச் செய்தல்**

65. நபி(ஸல்)அவர்கள் நோயாளியை நலன் விசாரிக்கச் சென்றால் “லா ப.்.ஸ

தஹூருன் இன்ஷா அல்லாஹ்” என்று கூறுவார்கள். (புகாரி 5656)

لَا بَأْسَ طَهُورٌ إِنْ شَاءَ اللهُ

(பொருள்: பரவாயில்லை. இன்ஷா அல்லாஹ் குணமாகிவிடும்.)

66. உஸ்மான் பின் அபில்ஆஸ்(ரலி) அவர்கள், தாம் இஸ்லாத்தை ஏற்றதிலிருந்தே தமது உடம்பில் வலி இருப்பதாக நபி(ஸல்) அவர்களிடம் முறையிட்டபோது, “உமது உடலில் வலிக்கும் இடத்தில் உமது கையை வைத்து பிஸ்மில்லாஹ் 3 முறை கூறி அவூதுபில்லாஹி வகுத்ரதிஹி மின்ஷர்ரிமா அஜிது வஉஹாதிர் என்று 7 தடவை கூறுமாறு நபி(ஸல்)கூறினார்கள். (முஸ்லிம் 2202)

أَعُوذُ بِاللهِ وَقُدْرَتِهِ مِنْ شَرِّ مَا أَجِدُ وَأُحَاذِرُ

(பொருள்: அல்லாஹ்வைக் கொண்டும் அவனது ஆற்றலைக் கொண்டும் நான் உணறுகிற, அஞ்சுகிற தீமையை விட்டும் பாதுகாவல் தேடுகிறேன்.)

**துன்பம் நேரும்போது**

67. இன்னா லில்லாஹி வஇன்னா இலைஹி ராஜிவூன். அல்லாஹும்ம அஜிர்னீ ஃபீ முஸீபதீ வஅக்லிஃப் லீ கைரன் மின்ஹா (முஸ்லிம் 918)

إِنَّا لِلّٰهِ وَإِنَّا إِلَيْهِ رَاجِعُونَ اللَّهُمَّ أَجِرْنِي فِي مُصِيبَتِي وَأَخْلِفْ لِي خَيْرًا مِنْهَا

(பொருள்: நாம் அல்லாஹ்வுக்கே உரியவர்கள். நாம் அவனிடமே திரும்பிச் செல்பவர்கள். இறைவா! என் துன்பத்தில் எனக்குக் கூலி வழங்குவாயாக. மேலும் இதற்குப் பகராமாக இதை விடச் சிறந்த இலகுவை எனக்கு வழங்குவாயாக.)

**இறப்புக்கு ஆறுதல் கூறும்போது**

68. இன்ன லில்லாஹி மா அகத வலஹு மா அ.்.தா வகுல்லு ஷையின் இன்தஹு பிஅஜலின் முஸம்மா .்.பல் தஸ்பிர் வல்தஹ்தஸிப். (புகாரி 1284)

إِنَّ لله مَا أَخَذَ وَلَهُ مَا أَعْطَى وَكُلٌّ عِنْدَهُ بِأَجَلٍ مُسَمًّى فَلْتَصْبِرْ وَلْتَحْتَسِبْ

(பொருள்: அல்லாஹ் தந்ததும், அவன் எடுத்துக் கொண்டதும் அவனுக்கே உரியதாகும். ஒவ்வொரு பொருளும் அவனிடம் ஒரு குறிப்பிட்ட தவணையுடன் உள்ளது. எனவே நீ பொறுமையை மேற்கொள். கூலியை எதிர்பாரு.)

**ஜனாஸாவை கப்ரில் வைக்கும்போது**

69. பிஸ்மில்லாஹி வஅலா சுன்னதி ரசூலில்லாஹி (அபூதாவூது 3213)

بِسْمِ اللهِ وَعَلَى سُنَّةِ رَسُولِ اللهِ

(பொருள்: அல்லாஹ்வின் பெயரால் அவனது தூதரின் வழிமுறைப்படி...)

**கப்ருகளை ஸியாரத் செய்யும்போது**

70. அஸ்ஸலாமு அலைக்கும் அஹ் லத்தியாரி மினல் மு.ஃ.மினீன வல்முஸ் லிமீன வஇன்னா இன்ஷா அல்லாஹு லலாஹிகூன். அஸ்அலுல்லாஹ லனா வலகுமுல் ஆ.ஃ.பியா (முஸ்லிம் 975)

السَّلَامُ عَلَيْكُمْ أَهْلَ الدِّيَارِ مِنْ الْمُؤْمِنِينَ وَالْمُسْلِمِينَ

وَإِنَّا إِنْ شَاءَ اللهُ لَلَاحِقُونَ أَسْأَلُ اللهَ لَنَا وَلَكُمْ الْعَافِيَةَ

(பொருள்: இந்த இல்லங்களின் இறை விசுவாசிகளே! முஸ்லிம்களே! உங்கள் மீது சாந்தி நிலவட்டும். அல்லாஹ் நாடும் போது நாங்களும் உங்களிடம் வந்து சேர்வோம். எங்களுக்கும் உங்களுக்கும்

நலன் விளைய அல்லாஹ்விடம் வேண்டு கிறோம்.)

**கோபம் வரும்போது**

71. அவூது பில்லாஹி மினஷ் ஷைத் தானிர் ரஜீம் (புகாரி 6115)

أَعُوذُ بِاللهِ مِنْ الشَّيْطَانِ الرَّجِيمِ

(பொருள்: விரட்டப்பட்ட ஷைத்தானை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுகிறேன்.)

**பொதுவான துஆக்கள்**

72. அல்லாஹும்ம இன்னீ அஸ்அலு கல்ஹுதா வத்துகா வல்அ.்.பா.்.ப வல் கினா என நபி(ஸல்)அவர்கள் பிரார்த்திப் பார்கள். (முஸ்லிம் 2721)

اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ الْهُدَى وَالتُّقَى وَالْعَفَافَ وَالْغِنَى

(பொருள்: இறைவா! உன்னிடம் நேர் வழி, பயபக்தி, கற்பொழுக்கம், தன்னி றைவு ஆகியவற்றை வேண்டுகிறேன்.)

73. ஒரு மனிதர் நபி (ஸல்) அவர் களிடம் வந்து "அல்லாஹ்வின் தூதரே! என் இறைவனிடத்தில் கேட்கும் போது நான் என்ன கேட்க வேண்டும்?" எனக் கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹும்ம மக்.:.பிர்லீ வர்ஹம்னீ வஆ .:.பினீ வர்ஸுக்னீ என்று கேள். இது உம் இம்மை மறுமை நன்மைகளை சேர்த்து உமக்கு வழங்கும்" என்று கூறினார்கள். (முஸ்லிம் 2697)

اللَّهُمَّ اغْفِرْ لِي وَارْحَمْنِي وَعَافِنِي وَارْزُقْنِي

(பொருள்: இறைவா! எனக்கு மன்னிப் பையும் அருளையும் வழங்குவாயாக! எனக்கு ஆரோக்கியம் தருவாயாக! எனக்கு உணவளிப்பாயாக.)

74. அல்லாஹும்ம முஸர்ரி.'.பல் குலூபி ஸர்ரி.'.ப் குலூபனா அலா தாஅதிக என்று நபி (ஸல்) அவர்கள் கூறுவார்கள். (முஸ்லிம் 2654)

اللَّهُمَّ مُصَرِّفَ الْقُلُوبِ صَرِّفْ قُلُوبَنَا عَلَى طَاعَتِكَ

(பொருள்: இறைவா! உள்ளங்களைத் திருப்புபவனே! எங்கள் உள்ளங்களை உனக்கு வழிப்படுவதன் பக்கம் திருப்பு வாயாக.)

75. “அல்லாஹும்ம இன்னீ அவூதுபிக மின் ஜஹ்தில் பலாயி வதரகிஷ் ஷகாயி வசூயில் கழாயி வஷமாததில் அ.'.தா” என நபி(ஸல்)அவர்கள் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுவார்கள். (புகாரி 6347)

اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ جَهْدِ الْبَلَاءِ وَدَرَكِ الشَّقَاءِ

وَسُوءِ الْقَضَاءِ وَشَمَاتَةِ الْأَعْدَاءِ

(பொருள்: இறைவர்! கடும் சோதனை, துர்ப்பாக்கியம், தீய முடிவு, என் துன்பத்தில் எதிரிகள் இன்பம் அடைவது ஆகியவற்றை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்.)

76. அல்லாஹு்ம்ம அஸ்லிஹ்லீ தீனீ அல்லதீ ஹு்வ இஸ்மது அம்ரீ வஅஸ்லிஹ் லீ துன்யாய அல்லத்தீ ஃபீஹா மஆஷி வஅஸ்லிஹ்லீ ஆகிரதீ அல்லத்தீ ஃபீஹா மஆதி வஜ்அலில் ஹயாத்த ஸியாததன்லீ ஃபீகுல்லி கய்ர், வஜ்அலில் மவ்த்த ராஹதன்லீ மின்குல்லி ஷர் என்று நபி(ஸல்)அவர்கள் பிரார்த்திப்பார்கள். (முஸ்லிம் 2720)

اللَّهُمَّ أَصْلِحْ لِي دِينِي الَّذِي هُوَ عِصْمَةُ أَمْرِي

وَأَصْلِحْ لِي دُنْيَايَ الَّتِي فِيهَا مَعَاشِي وَأَصْلِحْ لِي آخِرَتِي

الَّتِي فِيهَا مَعَادِي وَاجْعَلِ الْحَيَاةَ زِيَادَةً لِي فِي كُلِّ خَيْرٍ وَاجْعَلِ الموْتَ رَاحَةً لِي مِنْ كُلِّ شَرٍّ

(பொருள்: இறைவா! என் மார்க்கத்தை சீர்படுத்து. அதில் தான் என் விவகாரத்தின் பாதுகாப்பு இருக்கிறது! என் உலகை சீர்படுத்து. அதில் தான் எனது வாழ்க்கை இருக்கிறது! என் மறுமையை சீர்படுத்து. அங்கு தான் நான் திரும்பச் செல்ல வேண்டியிருக்கிறது. என் வாழ்வை எனக்கு ஒவ்வொரு நன்மையையும் அதிகப்படுத்தக்கூடிய தாக்கு. என் மரணத்தை எனக்கு எல்லாத் தீங்குகளை விட்டும் நிம்மதி அளிப்பதாக ஆக்கு.)

77. அல்லாஹும்ம ம.்.க்.்.பிர்லீ கதீஅதீ வஜஹ்லீ வஇஸ்ரா.்.பீ .்.பீஅம்ரீ வமா அன்த அ.்.லமுபிஹி மின்னீ அல்லாஹும்

ம.்.க்.்.பிர்லீ ஜித்தீ வஹஸ்லீ வகதயீ வஅம்தீ வகுல்லு தாலிக இன்தீ.

அல்லாஹும் ம.்.க்.்.பிர்லீ மாகத்தம்து வமாஅக்கர்து வமாஅஸ்ரர்து வமா அ.்.லன்து வமா அன்த அ.்.லமு பிஹி மின்னீ அன்தல் முகத்திமு வஅன்தல் முஅக்கிரு வஅன்த அலா குல்லி ஷையின் கதீர். என நபி(ஸல்) பிரார்த்திப்பார்கள்.

اللَّهُمَّ اغْفِرْ لِي خَطِيئَتِي وَجَهْلِي وَإِسْرَافِي فِي أَمْرِي وَمَا أَنْتَ أَعْلَمُ بِهِ مِنِّي اللَّهُمَّ اغْفِرْ لِي جِدِّي وَهَزْلِي وَخَطَئِي وَعَمْدِي وَكُلُّ ذَلِكَ عِنْدِي اللَّهُمَّ اغْفِرْ لِي مَا قَدَّمْتُ وَمَا أَخَّرْتُ وَمَا أَسْرَرْتُ وَمَا أَعْلَنْتُ وَمَا أَنْتَ أَعْلَمُ بِهِ مِنِّي أَنْتَ الْمُقَدِّمُ وَأَنْتَ الْمُؤَخِّرُ وَأَنْتَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ

(பொருள்: இறைவா! என் தவறு களையும், நான் அறியாமல் செய்த என் பாவங்களையும், என் காரியத்தில் நான்

வரம்பு மீறியதையும், என்னை விட நீ அதிகம் அறிந்துள்ள என் பிழைகளையும் மன்னிப்பாயாக! இறவைா! நான் விளை யாட்டாகவோ, காரியமாகவோ தவறா கவோ வேண்டுமென்றோ செய்த பாவங் களையும் மன்னிப்பாயாக. இவை யாவும் என்னிடமிருந்தே ஏற்பட்டுள்ளன. இறைவா! நான் முன்னர் செய்தவற்றையும் பின்னர் செய்தவற்றையும் இரகசியமாகச் செய்த வற்றையும் பகிரங்கமாகச் செய்தவற் றையும் எந்தப் பிழைகளை நீ என்னை விட அதிகம் அறிந்துள்ளாயோ அவற் றையும் மன்னிப்பாயாக! (தான் நாடிய வர்களை) முன்னுக்குக் கொண்டு வருப வனும் நீயே. பின்னுக்குத் தள்ளுபவனும் நீயே. அனைத்தின் மீதும் நீயே பேராற்ற லுள்ளவன்.) (முஸ்லிம் 2719)

78. அல்லாஹும்ம இன்னீ அவூதுபிக மினல் பரஸி வல்ஜுனூனி வல் ஜுதாமி வமின் ஸய்யில் அஸ்காமி என்று நபி (ஸல்) கூறுவார்கள். (அபூதாவூது 1554)

اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ الْبَرَصِ وَالْجُنُونِ وَالْجُذَامِ وَمِنْ سَيِّئْ الْأَسْقَامِ

(பொருள்: இறைவா! வெண் குஷ்டம் பைத்தியம், கருங்குஷ்டம், இன்னும் கொடிய நோய்கள் ஆகியவற்றை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்.)

79. அல்லாஹும்ம இன்னீ அவூதுபிக மின் முன்கராத்தில் அக்லாக்கி வல்அ∴. மாலி வல்அஹ்வா என்று நபி(ஸல்) கூறுபவர்களாக இருந்தனர். (திர்மிதி3591)

اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ مُنْكَرَاتِ الْأَخْلَاقِ

وَالْأَعْمَالِ وَالْأَهْوَاءِ

(பொருள்: இறைவா! தீய குணங்கள் தீய நடத்தைகள், மனோ இச்சைகள் ஆகியவற்றை விட்டும் நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்.)

80. "சொர்க்கத்துப் பொக்கிஷங்களில் ஒன்றை உமக்கு நான் அறிவிக்கட்டுமா?" என்று நபி(ஸல்) அவர்கள் என்னிடம் கேட்டார்கள். நான் சரி என்றேன், "அது லாஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில் லாஹ் لاَ حَوْلَ وَلاَ قُوَّةَ إِلاَّ بِاللهِ என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப் பவர்: அபூமூஸா(ரலி), (புகாரி 4205)

(பொருள்: தீமையிலிருந்து விலகு தலும் நன்மையின் மீது ஆற்றல் பெறு தலும் அல்லாஹ்வின் உதவி கொண்டே தவிர இல்லை.)

81. “நாவிற்கு இலகுவான தராசிற்கு (மறுமையில்) கனமான ரஹ்மானுக்கு பிரியமான இரு வார்த்தைகள் சுப்ஹானல்லாஹி வபிஹம்திஹி, சுப்ஹானல்லாஹில் அழீம் ஆகியனவாகும்” என நபி (ஸல்)அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி), (புகாரி 7563)

سُبْحَانَ اللهِ وَبِحَمْدِهِ سُبْحَانَ اللهِ الْعَظِيمِ

(பொருள்: இறைவனைப் புகழ்வதுடன் தூயவன் என துதிக்கவும் செய்கிறேன். மகத்துவத்திற்குரிய இறைவன் தூய்மையானவன்.)

## திருக்குர்ஆனிலிருந்து சில:

**பெற்றோருக்காகக் கேட்கும் துஆ**

82. ரப்பி.்.க் .்.பிர்லீ வலிவாலிதைய்ய, ரப்பிர்ஹம்ஹுமா கமா ரப்பயானீ ஸ.்.கீரா (71:28,17:24)

﴿رَبِّ اغْفِرْ لِي وَلِوَالِدَيَّ﴾ [نوح:٢٨]

﴿رَبِّ ارْحَمْهُمَا كَمَا رَبَّيَانِي صَغِيرًا﴾ [الإسراء:٢٤]

(பொருள்: என் இறைவா! என்னையும் என் பெற்றோரையும் மன்னிப்பாயாக. சிறுவனாக இருக்கும்போது என்னை இருவரும் பராமரித்தது போல் இறைவா! இவ்விருவருக்கும் அருள்புரிவாயாக!)

**கணவன் மனைவி கேட்கும் துஆ**

83. ரப்பனா ஹப்லனா மின் அஸ்வா ஜினா வதுர்ரிய்யாதினா குர்ரத அ.்.யுனின் வஜ்அல்லனா லில்முத்த.்.கீன இமாமா.

ரப்பிஜ்அல்னீ முகீமஸ் ஸலாத்தி வமின் துர்ரிய்யதீ ரப்பனா வதகப்பல் துஆ.்., ரப்பன.்.க்.்.பிர்லீ வலிவாலி தைய்ய வலில் மு.்.மினீன யவ்ம யகூமுல் ஹிஸாப். (25:74, 14:40,41)

﴿رَبَّنَا هَبْ لَنَا مِنْ أَزْوَاجِنَا وَذُرِّيَّاتِنَا قُرَّةَ أَعْيُنٍ وَاجْعَلْنَا لِلْمُتَّقِينَ إِمَامًا﴾ ﴿رَبِّ اجْعَلْنِي مُقِيمَ الصَّلَاةِ وَمِنْ ذُرِّيَّتِي رَبَّنَا وَتَقَبَّلْ دُعَاءِ ، رَبَّنَا اغْفِرْ لِي وَلِوَالِدَيَّ وَلِلْمُؤْمِنِينَ يَوْمَ يَقُومُ الْحِسَابُ﴾

(பொருள்: எங்கள் இறைவா! எங்கள் வாழ்க்கைத் துணைகளிலிருந்தும் மக்களிலிருந்தும் எங்களுக்குக் கண் குளிர்ச்சியைத் தருவாயாக. (உன்னை) அஞ்சுவோருக்கு முன்னோடியாகவும் எங்களை ஆக்குவாயாக! என் இறைவா! என்னையும் என் சந்ததிகளையும் தொழுகையை நிலை நாட்டுவோராக ஆக்குவாயாக. எங்கள் இறைவா! என் பிரார்த்தனையை ஏற்பாயாக! எங்கள் இறைவா! என்னையும் என் பெற்றோரையும் மு.்.மின்க

ளையும் விசாரணை நடைபெறும் நாளில் மன்னிப்பாயாக!)

**கல்வி அதிகரிக்க**

84. ரப்பி ஸித்னீ இல்மா. ரப்பிஷ்ரஹ்லீ ஸத்ரீ வயஸ்ஸிர்லீ அம்ரீ வஹ்லுல் உக்ததம் மி(ன்)ல்லிஸானீ ய.்.ப்கஹூ கவ்லீ

﴿رَبِّ زِدْنِي عِلْمًا﴾ [طه:١١٤]، ﴿قَالَ رَبِّ اشْرَحْ لِي صَدْرِي، وَيَسِّرْ لِي أَمْرِي، وَاحْلُلْ عُقْدَةً مِنْ لِسَانِي، يَفْقَهُوا قَوْلِي﴾ [طه:٢٥-٢٨].

(பொருள்: என் இறைவா! எனக்குக் கல்வியை அதிகப்படுத்து. (20:114) என் இறைவா! என் உள்ளத்தை எனக்கு விரிவுபடுத்து. எனது பணியை எனக்கு எளிதாக்கு. என் நாவிலுள்ள முடிச்சை அவிழ்த்துவிடு. (அப்போது தான்) எனது

சொல்லை அவர்கள் புரிந்துகொள் வார்கள். (20:25-28)

**இரு உலக நன்மையை வேண்டுதல்**

85. ரப்பனா ஆத்தினா ஃபித்துன்யா ஹஸனதன் வஃபில் ஆகிரதி ஹஸனதன் வகினா அதாபன் நார். (2:201)

﴿رَبَّنَا آَتِنَا فِي الدُّنْيَا حَسَنَةً وَفِي الآَخِرَةِ حَسَنَةً وَقِنَا عَذَابَ النَّارِ﴾ [البقرة:٢٠١]

இவ்வாறு நபி(ஸல்) அவர்கள் அதிகம் பிரார்த்திப்பார்கள் என அனஸ் (ரலி) அறிவிக்கிறார்கள். (புகாரி 6389)

(பொருள்: எங்கள் இறைவா! இவ்வுல கிலும் எங்களுக்கு நன்மையை வழங்கு வாயாக. மறுவுலகிலும் நன்மையை (வழங்குவாயாக). நரக வேதனையிலி ருந்து எங்களைக் காப்பாயாக.)

**குறிப்பு:** பின்வரும் வசனங்களிலும் மேலும் பல வசனங்களிலும் கருத்தாழ மிக்க சிறந்த துஆக்கள் வந்துள்ளன.

(2:201,286), (3:8,147,193), (7:23,126), (18:10), (21:83,87,89), (23:97,98), (25:65) (37:100), (59:10), (66:8)